*அவ்வடிவமேற்ற உம்மைக் காலசக்கிரமாகி உலகை மாற்றம் பெறச் செய்பவராக வேதம் கூறுகிறது. உபாதியால் பெற்ற நான்காவது வடிவம் சிவன். இவ்வடிவேற்ற நீர் மாயையுடன் சேர்ந்து கல்பம் எனும் காலவடிவில் நின்று உலகம் அனைத்தையும் மூலப்பொருளாக உருமாற்றம் செய்ய ஒடுக்குகிறீர். மாயை எனும் உபாதியுடன் எடுத்த ஐந்தாவது மூர்த்தி விஷ்ணு. மாயையே உருவான இவர் விளையாட்டாக உலகமனைத்தையும் காப்பாற்றுகிறார். இப்படி மாயை உதவ ஸூர்யன் முதலான வடிவமேற்றுள்ள சுத்தப்பிரும்மான நீர் நான் விரும்பியதைத் தருவீர் (25-31)*

மாயா பத்த்தஷ் ஷட்ட: ப்ரதமஶரீரீ ஹிரண்யகர்ப்பஸ்தவம்।
தத்தத் கர்மானுகுணம் கரோஷிஸர்கம் ஸமஸ்தலோகஸ்ய॥ 32

ப்ராக் பத்மாஸநரூபக் ரஹணாத் பவதோऽப் யுபாதிதோ பிந்நா:।
ஏதாஶ் ச ஸகுணமூர்தீ ராலம்ப்ய மதாநி பஞ்ச ஜாதாநி॥ 33

ஏதே ஹி பஞ்சதேவா: ஸ்வஸ்வாதாரேஷு ஸந்தி ஸர்வத்ர।
வர்ணஸ்வதர்ம விபவாத் தேஜோரூபா ஸ்த்ரிவர்ணதேஹேஷு॥ 34

காயத்ரீ க்ரஹணேந ஹி தத்தத்தேஜோ விஶேஷதோ பாதி।
தத்தத் ஜாதிகுணா அபி உத்க்ருஷ்டத்வேந தேந ஜாயந்தே॥ 35

மூலாதாரே கணபோ மணிபூரே ஹரிரநாஹதே ஶம்பு:।
ராஜதி ரவிர் விஶுத்தௌ ப்ரும்ஹரந்த்ரே ஶிவா பரா ஶக்தி:॥ 35

அபி ச ஷடாதாரேஷு ப்ராப்யைவம் த்த்யான யோக சித்தலயௌ।
முக்தா பவந்தி தஸ்மாத் பஞ்சாயதநார் சநேऽதிஹர்ஷஸ்தே॥ 37

கணபதி பஞ்சாயதநம் பஞ்சாயதநம் ரவீஸ்வராதீநாம்।
யத்வா தத்வா க்ருதமபி பூஜாவிஷயேऽதிமாத்ரத்ருப்திஸ்தே॥ 38

ப்ராஸாத ஶுத்த பூஜா அத ஏவ விஹாய பஞ்சதேவாநாம்।
பஞ்சாயதநஸபர்யாம் ஸகுண ஸமஷ்ட்யர் சநாம் வதந்தி புதா:॥ 39

*மாயைக்கு அடங்கிய உமது ஆறுவது வடிவம் ஹிரண்ய கர்ப்பர் (பிரும்மா). முதல் சரீரி இவர். அவரவரது வினைக்கேற்ப உலகமனைத்தையும் வெளிப்படுத்துபவர் (படைப்பவர்). தாமரையில் அமர்ந்துள்ள இந்த பிரும்மாவின் வடிவமேற்பதற்கு முன்னுள்ள ஸகுணமான ஐவரை மூல*

*புருஷராகக்கொண்டு தனித்தனியாக ஐந்து மதங்கள் தோன்றின. இந்த ஐந்து தேவர்களும் எல்லா விடங்களிலும் தனக்கெனத்தனித்த ஆதாரங்களில் உள்ளனர். முக்குணங்களால் மூன்று நிறங்கள் கொண்ட உடலமைப்புடன் நிறத்திற்கேற்ற இயல்பும் பெருமையும் பெற்று தேஜஸ்வடிவில் உள்ளனர். அந்தந்த தேஜஸும் அதற்குரிய காயத்திரியைப் பெற்றுத் தனிச்சிறப்பு பெறுகின்றது. அந்தந்த தோற்றத்திற்கேற்ற குணங்களும் அவற்றில் அதிகமாகின்றன. மூலாதாரத்தில் கணபதி, மணிபூரத்தில் விஷ்ணு, அநாஹதத்தில் சிவன், விசுத்தியில் சூரியன், ப்ரம்மரந்திரத்தில் சக்தி, என அவர்கள் விளங்குகின்றனர். ஆறு ஆதாரங்களிலும் தியான யோகமும்சித்தலயமும் ஏற்பட யோகி முக்தியடைகிறார். அதனால் பஞ்சாயதநார்சனையில் மிகவும் உமக்கு மகிழ்ச்சி. (அந்தந்த ஆதாரத்தில் அந்தந்த தேவதையையே உள்ளும்; வெவ்வேறு சிலைவடிவங்களில் வெளியிலும் பூஜை செய்வதே பஞ்சாயதன வழிபாடு) கணபதியை நடுவில் வைத்துக் கணபதி பஞ்சாயதனம், இவ்வாறு மற்றவர்களில் ஒவ்வொருவரை நடுவில் வைத்து அந்தந்த பஞ்சாயதனம், ஏதேனும் ஒரு முறையில் வழிபட்டாலும் உமக்கு மிக்க மகிழ்ச்சியே. பிராஸாத பூஜை சுத்த பூஜை என்ற வியஷ்டிபூஜா முறைகளைத் தவிர்த்து ஐந்து ஸகுண தேவர்களின் ஸமஷ்டி பூஜையாக இந்த பஞ்சாயதன பூஜை உள்ளதை அறிவாளிகள் விரும்புவர் (32-39)*

ஹர்யாதிகணேசாந்தா: பஞ்சைதா ப்ரம்ஹமூர்தயோ முநிபி:।
அத ஏவ ப்ரணவஸ்ய ச காயத்ர்யாஸ் சாபி தேவதா: ப்ரோக்தா:॥ 40

வ்யாசகக்ஷதே ஹி ருஷய: காயத்ர்யா: பஞ்சதேவதாபரதாம்।
ப்ரணவஸ்யாபி ததைவ ப்ரபஞ்சயந்திஸ்ம பஞ்சதாऽப்யர்த்தான்॥ 41

அத ஏஷாம் பஞ்சாநாம் ப்ரம்ஹத்வ நிரூபணே ச நிஷ்ணாதா:।
உத்தர மீமாம்ஸாஷ் ஷட் ஸூத்தாத்வைதேந தேநிரே முநய:॥ 42

ப்ரதிபாதயந்தி சைதே யத்யப்யாபாததோ விபிந்நான் வை।
ஸர்வேஷாம் ஹிருஷீணாம் ப்ராயஸ்த்வய்யேவ பரமதாத்பர்யம்॥ 43

ஏதே பஞ்சமதஸ்த்தா பவத: ஸர்வேஷு பூர்வபூஜ்யத்வம்।
விக்நாதிபத்ய மங்கீ குர்வந்தி யதோ கணாதிபத்யம் ச॥ 44

ஹரிமுதல் கணேசர் வரை உள்ள இந்த பிரும்ம மூர்த்திகள் பிரணவத்திற்கும் காயத்ரிக்கும் தேவதைகளாவர். காயத்திரிக்கும் பிரணவத்திற்கும் பொருளை விளக்க வந்த முனிவர்கள், இந்த ஐவருமே உட்பொருள் எனக் கூறியுள்ளனர். அதனால் தான் உத்தரமீமாம்ஸையை விளக்க வந்த ஆறு முனிவர்களும் அவரவர் மதப்படி ஶுத்தாத்வைதப் பொருள் என இந்த ஐவரில் ஒருவரையே காட்டியுள்ளனர். அவர்கள் கொள்கைப்படி வேறு வேறு முழுமுதற் கடவுளை ஏற்றாலும், எல்லோருக்கும் நீரே முக்கிய மானவர். அதனால் இந்த ஐந்து மதத்தினரும் தம் தம் கடவுளை வழிபடு முன் உம்மை வழிபடுகின்றனர். விக்னங்களைக் கட்டுப்படுத்துகிற சக்தியும் கணங்களின் தலைவராகிற சக்தியும் உம்மிடமே உள்ளதென (நீர்தான் விக்னேச்வரர், கணபதி என) ஏற்றுள்ளனர். (ஐவர் -தனித்துள்ள போது வியஷ்டி-கணேசர் சிவன் என்றவாறு. ஐவரும் சேர்ந்தால் கணம். மும்மூர்த்திகள் என்றால் கணம். கணத்திற்குத் தலைவர் நீரே) (40-44)

பூகத பீஜாதி யதா பாதபரூபேண ஜாயதே ஜகதி।
ப்ரம்ஹைவ பீஜபூதம் ப்ரக்ருதி: ப்ருத்திவீ தயா ஹி ஸம்யோகாத்॥ 45

காரண ஸூக்ஷ்ம ஸ்த்தூல ப்ரபஞ்சரூபேண ஜாயதே க்ரமஶ:।
மூலம் கணபதிரூபம் ப்ரபஞ்சரூபஸ்ய பாதபஸ்யைவம்॥ 46

புத்திஸ் ஸித்திஶ் ச பலே மூலம் கணபோऽஸ்ய விஶ்வரூபதரோ:।
ஶாக்கா: கேஶா: கந்தம் த்வர்கோऽக்கிலமூல முச்யஸேऽதஸ் த்வம்॥ 47

மூலே ஜலஸேகாத் கில தருபத்ரப்பலாதயோऽபிவர்த்தந்தே
தவபூஜயா கணபதே ரவிஶிவஶக்த்யாதயோऽபி த்ருப்யந்தி॥ 48

ஏவம் ஸகுணப்ரம்ஹ வ்யபதேஶவதாம் ச பஞ்ச தேவாநாம்।
பூர்ணகலாம்ஶாம்ஶாம்ஶாவதாராஶ் ச மூர்தயோऽநந்தா:॥ 49

பவத: கதிபயமூர்த்தீ: ஆவிர்ப்பாவாவதார தாரமுகா:।
வைநாயகமதவிதித ப்ரக்ரியயைவ ப்ரவீமி ஹேரம்ப॥ 50

விளை நிலத்தையடைந்த விதை மரமாக வளரும். ப்ரகிருதியே விளை நிலம். பிரும்மம் பீஜம். இவற்றின் சேர்க்கையால் காரணம் ஸூக்ஷ்மம் ஸ்தூலம் என விரிந்து பிரபஞ்சமாகிறது. இந்த பிரபஞ்சமரத்திற்கு கணபதி வேர்.

*ஸித்தியும் புத்தியும் காய்கள். விஷ்ணுவும் சிவனும்கிளைகள். கிழங்கு ஸூர்யன். எல்லாவற்றிற்கும் ஆணிவேர் நீர், வேரில் நீரூற்ற மரம் இலை காய் எல்லாம் வளரும். உமதுவழிபாட்டால் சிவன் சூரியன் முதலானோரும் திருப்தியடைகின்றனர். இந்த ஸகுணவடிவினர் ஒவ்வொருவருக்கும் பூர்ணாவதாரம் அம்சாவதாரம் அம்சாம்சா வதாரம் என எண்ணற்ற மூர்த்திகள் உண்டு. ஹேரம்பரே! இவ்வாறு உமக்கும் பல மூர்த்திகள் உண்டு. அவற்றில் சிலவற்றை விநாயகமதக் கொள்கைப்படி கூறுகிறேன் (45-50)*

ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ஜ்யோதீரூபம் சநிர்குணம் ப்ரம்ஹ।
ஏதந்நிர்வ்யாபாரம் கஜபதவாச்யம் லயாதிஹேது த்வாத்॥ 51

யோகீந்த்ரா கச்சந்தி ஹி ஸமாதி நாத்ரேதி க: ஸ்ம்ருதோ முநிபி:।
ப்ரணவாத்மக ஜகதஸ்மாத் ஜாயதே இதி ஜ:ஸ்ம்ருதிப்ரதீதார்த்த:॥ 52

கஶ்சாஸௌ ஜஶ்சேதி வ்யுத்பாதயதி ஸ்ம்ருதிர்ஹி கஜஶப்தம்।
ஏஷ ப்ரதிபாதயதி ப்ரபவாப்யய காரணம் பரம் ப்ரம்ஹ॥ 53

மூலப்ரக்ருதிஸ் த்ரிகுணா ஶுக்தௌ ரஜதம் யதா ததோ ஜாதா।
தத்கத சித்ப்ரதிபிம்பம் ஸகுணப்ரம் ஹேதி கீர்திதம் முநிபி:॥ 54

ஓங்காரப்ரம் ஹேதி ச நர இதி நாம்நீ ப்ரகீர்த்திதே தஸ்ய।
ஸகலஜ்யோதீரூபம் ஸகுணஸ்யோக்தம் ஹி தத்வவித்வத்ப்பி:॥ 55

மூலாவித்யா கதநரம் அத்வைதப்ரம்ஹ ரூபமபி பிப்ப்ரத்।
நிர்குண ஸகுணஜ்யோதீ ரூபம் உபயதா த்ருதீய மப்யுக்தம்॥ 56

அத்வைத இதி ஸதாத்மே த்யாம்நாய ந்தே மஹாவாக்யை:
இத்யுக்தாநி க்ரமதோ நாமாந்யேஷாம் ஸ்ம்ருதீதி ஹாஸாதௌ॥ 57

நரவாச்ய ஸகல ரூபோ கஜவாச்யோ நிஷ்கலஸ்வரூபஸ்த்வம்।
விக்ந்நேஶ ஸகல நிஷ்கல ரூபமஹாவாக்ய தாரீ த்வம்॥ 58

ஓம் தத் ஸதிதிஹி பேதாத் ப்ரம்ஹ ப்ரோக்தம் த்ரிதா ஸுதீபிரபி।
ப்ரதிதம் மூர்தமமூர்தம் மூர்தா மூர்தம் த்ரிதா ததேவமபி॥ 59

*ஸத்யம் ஜ்ஞானம் அநந்தம் பேரொளி நிர்குணம் இயக்கமற்றது என்று விளக்கப்படுகிற பிரும்மம் கஜம் எனப்படுகிறது. உலகின் லயமும் (க-ग) தோற்றமும் (ஜ) இதனிடமிருந்து உண்டாவதால் இது 'கஜம்'. யோகிகள் ஸமாதி*

நிலையில் இதனை அடைவதால் இது 'க'. ப்ரணவம் என்ற மூல ஒலி முன்னிட்ட உலகம் இதிலிருந்து தோன்றுவதால் இது 'ஜ' 'கவும் ஜவும் சேர 'கஜ' - தோற்றத்திற்கும் மறைவிற்கும் காரணமான பரம் பொருள். சிப்பியில் வெள்ளியுணர்வு தோன்றுவதுபோல் பிரும்மத்திடமிருந்து மாயை தோன்றிற்று. அந்த மாயையாகிய கண்ணாடியில் காண்கிற பிரதிபிம்பமே ஸகுணப்ரம்ஹம். இந்த ஸகுணப்ரம்ஹத்திற்கு 'ஓங்காரம் என்றும் 'நரன்' (மனிதன்) என்றும் பெயருண்டு. நிர்குண நிஷ்கல ஒளியானது ஸகுண ஸகல ஒளியாகத் தோன்றியுள்ளது. அந்த மூலாவித்யையாகிற மாயையால் தோன்றிய 'நர' ரூபமும் அத்வைதமான ப்ரும்ஹமும் சேர்ந்த ஸகுண நிர்குண ரூபம் மூன்றுவதாகத் தோன்றுகிறது. நிர்குணம் ''அத்வைதம்'' ''ஸத்'' ''ஆத்மா'' என்று இவற்றை மஹாவாக்யங்கள் கூறுகின்றன. மனிதனுன உமது ஸகல வடிவம், கஜமான நிஷ்கல வடிவம், மற்றும் விக்க்னேசராக ஸகல நிஷ்கல வடிவம், ஓம் தத் ஸத் என்ற மஹாவாக்யம் காட்டுகிற மூன்று நிலைகளாகும், மூர்தம், அமூர்தம், மூர்தாமூர்தம் என்றும் உபநிஷதங்கள் விளக்கும் (51-59)

நாமாந்தராணி ஸர்வாண்யேதா ந்யுதிதாநி வேதஶீர்ஷேஷு।
கமலாவல்லப பவத: பூர்வோக்த த்ரிவித ரூபதாரயிது:॥ 60

அபி சாந்யாநி கணபதே நாமாநி ஸஹஸ்ரஶ: ப்ரஸித்த்தாநி।
கர்மஜ்ஞாநோபாஸந காண்டேஷு ப்ருதக் விநாயகாதீநி॥ 61

நிர்குண ரூபத்த்யாநம் ந ஸாதகாநாம் ப்ரஸித்த்யதி க்ஷிப்ரம்।
ததநுக்ரஹாய தத்ஸே தீபரிபாகா நுரூபரூபாணி॥ 62

மந்த்ராதி காரிணாமபி யதாருசிஸ் ஸ்யாத் ததாநு குண்யேந।
விக்ரஹவரா க்ருஹீதா: ஸர்வே தே மாம் ஸதாநுக்ருண்ஹந்து॥ 63

கைலாஸே வைகுண்ட்டே ஹிரண்மயபுரே ச யா மணித்வீபே।
பூஜ்யந்தேऽந்யஸ்மிந்வா ஸர்வா மூர்தீஶ்ச தாஸ்தவோபாஸே॥ 64

அஷ்டோத்தரம் ஶதம்வா ஸஹஸ்ரமத்யஷ்ட மூர்தயோ வாதே।
முக்க்யத்வேந க்க்யாதா: கேலந்த்வகிலா: ஸதா மமஸ்வாந்தே॥ 65

காஶ்சந பத்நீஹீநா: பஹுஶக்தியு தாஶ்ச மூர்தய: காஶ்சித்।
பாந்த்வேகதந்த பவதோऽப்யேகத்வ்யஷ்டாதி ஶக்தய: ஸர்வா:॥ 66

லக்ஷ்மீ நாதரே! இந்த மூன்று நிலைகள் கொண்ட உமது வேறு பெயர்களையும் கர்மகாண்டம் ஜ்ஞானகாண்டம் உபாஸநா காண்டம் மற்றும் உபநிடதங்கள் கூறுகின்றன. ஸாதகர்களுக்கு நிர்குணஸ்வரூபத்தைத் தியானிப்பது எளிதில் கூடுவதில்லை. அவர்களுக்கு அருள் புரிய அறிவு பக்கு வமடைந்த நிலையை ஒட்டித் தியானிக்க எளிதான பல வடிவங்களை மந்தனுன ஸாதகனுக்கும் ஏற்றவாறு ஏற்றுள்ளீர். அவற்றை நான் வழிபடுகிறேன், 108-1008 வடிவங்கள் அவற்றில் முக்கியமானவை என்பர். அவை அனைத்தும் என் உள்ளத்தடத்தில் விளையாடட்டும். அவற்றில் சில மனைவி-யற்றவை. பல மனைவிகளுள்ளவைகளும் சில. 1-2-8 என்று விரிகிற அந்த சக்திகள் அனைவரும் என்னைக் காக்கட்டும். (60-66)

பஹுபலபுஷ்பமஹீருஹ நிகராராமம் நிகட்டிதகவாடம்।
க்ருத்வாஹ்யாராமே ஶித்ருஸவிதே திஷ்டன் யதோபவநபால:॥ 67

நோத்க்காடயதி கவாடம் ஸ்வாம்யாதேசம் விநா ப்ரவேஶாய।
தத்வந்நோத்க்காடயதி ஸ்வாதிஷ்டானாதி நிஜ கவாடாநி॥ 68

ஸர்வஶரீரிஶரீரே மூலாதாரஸ்த்திதாஹி குண்டலிநீ।
ஆவ்ருத்ய ஷடாதாரான் ம்ருத்பாண்டமிவாஸ்தி மூலவந்ஹேர்யா॥ 69

யத்வத் ஶமீத்ருமேऽக்நிஸ் தத்வந் மூலாநலே பவாநஸ்தி।
தத்ரத்ய ஸித்த்தி புத்த்யா யுத பவதாஜ்ஞாம் விநா கதாசிதபி॥ 70

யதி தவ பூஜா க்ரியதே விநாயகோத்க்காடிதா: ஷடாதாரா:।
அத ஏவ பூர்வபூஜ்யஸ் ஸர்வாரம்பே த்வமேவ தேவாத்யை:॥ 71

ஒரு பெருந்தோட்டம். பூத்துக்காய்க்கிற பல மரங்கள் அதில் உண்டு. அதன் காவற்காரன் அதன் வாயிலைப்பூட்டி தோட்டத்தின் உடைமையாளரின் அருகே நிற்கிறான். உடைமையாளரின் அனுமதியின்றி உள்ளே எவரையும் செல்லவிடுவதில்லை. அவ்வாறே மூலாதாரத்திலுள்ள குண்டலினீ ஸ்வாதிஷ்டானம் முதலிய இடங்களின் வாயிலை அடைத்து மூலாதாரத்தில் தங்கியுள்ளது. இந்த ஆறு ஆதாரங்களிலும் செல்கிற மூலக்கனலின் ஆதாரமான மூலாதாரம், நெருப்புச்சட்டி போன்றுள்ளது. வன்னி மரத்தின் சூடு அதன்வேரில் குடிகொண்டுள்ளது போல் இந்த அக்னி

*மூலாதாரத்திலுள்ளது. அந்த மூலக்கனலில் நீர் இருக்கிறீர். ஸித்தி புத்தி சக்திகளுடன் கூடிய உமது அனுமதியின்றி குண்டலினீ கதவுகளைத் திறப்பதில்லை. விநாயகரே! உம்மை வழிபடுபவருக்கு அந்த ஆறு ஆதாரங்களும் திறக்கப்படுகின்றன. அதனால் தான் தேவர் முதலானோராலும் நீரே எல்லாப் பணிகளின் தொடக்கத்தில் முதலில் பூஜிக்கப்படுகிறீர் (67-71)*

ஶுக்லாம்பரேதி மந்த்ரம் ப்ரோச்சார்ய சதுர்முகாதயோऽபித்வாம்।
ஶ்வேதவிநாயக மூர்திம் த்த்யாத்வா குர்வந்தி குட்டநம் முஷ்ட்யா॥ 72

ஸர்வ ஶரீரிஶிரஸ்த்தா மூர்த்தநி கரகுட்டநாத் ஸுதா கலிதா।
பததி ஸுஷும்நா நாடீத்வாரா மூலாதுபர்யுபோத்கதயா॥ 73

ஸித்த்யா புத்த்யா ச யுதே மூலாதாரஸ்த்த கணபதௌ பவதி।
தேந ப்ரஸீததி பவான் கரோதி கர்மார் ஹமந்தராத்மாநம்॥ 74

தாத்ருஶகுட்ட நதுஷ்டம் ஶ்வேத விநாயகமநாரதம் கலயே।
பீயூஷமதந ஸமயே புருஹூத முகைஶ் ச பூஜிதோ யோऽபூத்॥ 75

*'சுக்லாம்பரதரம்' எனத் தொடங்குகிற மந்திரத்தைச் சொல்லி, பிரும்மாதியரும் வெண்ணிற விநாயகரை (ஶ்வேதவிநாயகரை)த் தியானித்துத் தலையில் கைகளால் குட்டிக் கொள்கின்றனர். எல்லா சரீரிகளின் தலையில் உள்ள அமுதம் கைகளால் குட்டிக் கொள்வதால் நழுவி, மூலாதாரத்திலிருந்து பிரும்மரந்திரம் வரை எழுந்து வருகிற ஸுஷும்நா நாடி வழியே, ஸித்தி-புத்திதேவிகளுடன் மூலாதாரத்தில் உள்ள கணபதியான உம் மீது விழுகிறது. அதனால் மகிழ்ந்த நீர் அந்தராத்மாவைத் தொடங்கிய பணிக்கேற்றவனாகச் செய்கிறீர். அப்படி குட்டிக் கொள்வதால் மகிழ்கிற ச்வேதவிநாயரைத் தியானிக்கிறேன். அமுதம் கடையும் போது இந்திரனால் நீர் இப்படி வழிபடப்பட்டீர். (இந்த சுவேதவிநாயக மூர்த்தியைத் திருவலஞ் சுழியில் காணலாம்) (72-75)*

பவதஸ்தேஜோரூபம் நராமராத்யைர் நஶக்யதே த்ரஷ்டும்।
அத ஏவ நயநவிஷயம் க்ருண் ஹாஸி கஜாநநஶரீரம்॥ 76

ந்ருகஜாத்மக ரூபத்வாத் நிர்குணஸகுண ஸ்வரூபகத்வாச்ச।
ஹே லம்போதர பவதோ கஜாநநாக்யா ஸு விஶ்ருதாऽऽம்நாயே॥ 77

கஜபதவாச்யம் ஹிமுகம் ப்ரதமம் கார்யம் ஹி யஸ்ய தேவஸ்ய।
அத ஏவ வா ஸ கதிதோ கஜமுக நாமேதி மந்வதே முநய:॥ 78

த்யக்த்வா மாயாவதநம் கஜவதநம் நிர்குணம் தத்தௌ தேவ:।
யோலீலயா கணேஶஸ் தம் த்வாம் ஶரணம் ஸதாப்ரபத்யேஹம்॥ 79

*கஜாநநர் - உமது ஒளிவடிவம் மனிதனாலும் தேவனாலும் காணமுடியாதது. அதனால் காணக்கூடிய யானை முகவடிவை எடுத்துள்ளீர். நிர் குண ஸகுணக் கூட்டுவடிவமானயானையும் மனிதனுமாக வடிவம் கொண்டதால் உமக்கு கஜானனர் என்ற பெயர் புகழ்பெற்றது, 'கஜ' என்ற சொல்லிற்குப் பொருளான லயமும் படைப்புமே இவருக்கு முகம் - முக்க்யம் என்பதாலும் கஜ முகன்' என்றபெயர் வந்திருக்கும் என முனிவர் கூறுவர். மாயையின் வடிவான மனித முகத்தைத் தவிர்த்து நிர் குண கஜமுகத்தை விளையாட்டாக ஏற்ற உம்மிடம் புகலடைகிறேன் (76-79)*

விகதோ நாயக இதி ஸா விநாயகாக்க்யா ஶ்ருதௌ ஸமாம்நாதா।
ஸர்வேஷாம் ஹி விசேஷாந் நாயக இத்யப்யபி ப்ரயந்த்யர்த்தம்॥ 80

விக்க்நோऽபிஹிதோ ஜகதாம் ஸாமர்த்த்யஸ்ய ஹிவிஶேஷதோ ஹநநாத்।
உக்த: ஸ ஏவ காலஸ் தந்நாதத்வாத் த்வமேவ விக்க்நேஶ:॥ 81

ஜீவேஶ்வரா ஹி வஶகா பவந்தி காலாத்மந: பரேஶஸ்ய।
தததீஶ்வ ரஸ்ய பவதோ விக்க்நேஶத்வே கிமஸ்தி வக்தவ்யம்॥ 82

விநாயகர்-விக்க்நேசர் - *இவருக்கு மேல் இவரைவிடச்சிறந்த கண்காணிப்பவரும் வழிகாட்டியும் இல்லை. அதனால் விநாயகர் என்பர். உலகின் திறமையைத் தனித்துக் குறைப்பதால் தடைசெய்வதால் இடையூறுகளை விக்க்னம் என்பர். இவரே காலம். விக்னங்களில் மேலாளரானதால் காலவடிவினரான இவர் விக்க்நேசர் ஜீவர்களும் ஈசுவரர்களும் காலத்திற்கு வசப்படுபவரே. காலத்தின் வடிவான. நீர் விக்னேசர். இதில் சொல்லுக் கேது இடம்? (80-82)*

ஸர்வப்ரம்ஹாண்டாநாம் ஸ்வதந்த்ர தேவோ விநாயகோ ராஜா।
ராஜப்ரதிநிதிரர்க: ஸஹாயபூதா ஶிவா மஹாராஜ்ஞீ॥ 83

ஸ்ருஷ்டிஸ்த்திதிஸம் ஹாரான் கர்தாரோ த்தாத்ருஹரி கிரீஶாஶ்ச।
ராஜ்யாதிகாரஸசிவா: ஸந்தி பவானீ திவாகராத்யாஶ்ச॥ 84

யத் ராஜ்ய ரக்ஷணாயைதத் ஸேநாபதிதாம் குஹோ மஹாஸேந:।
தத் ஜ்யேஷ்ட்டராஜநாமா கஜாநநோऽபூ திதீரிதம் முநிபி:॥ 85

யஸ்ய ஜ்யேஷ்ட்டாபாவாத் ஜ்யேஷ்ட்டத்வாத் ராஜபாவவதாம்।
தத்ஜ்யேஷ்ட்ட ராஜ நாமப்ரோக்தம் ஸ ஸதா விராஜதாம் சித்தே॥ 86

ஜ்யேஷ்டராஜர் - *எல்லா பிரம்மாண்டங்களுக்கும் தன்னிச்சைப்படி செயல்படுகிற பேரரசர் விநாயகர். அவரது பிரதிநிதி சூர்யன். மஹாசக்தியான பார்வதி துணைபுரிபவர். பிரும்மா விஷ்ணு சிவன் என்ற மூவரும் படைப்பு காப்பு மற்றும் ஒடுக்கத்திற்கான அதிகாரிகளாக சூரியன் சக்தி இவர்கள் அமைச்சர்கள். அதனுல் கஜானனரை ஜ்யேஷ்டராஜர், (மூத்த அரசர்) என்பர். இவரை விட மூத்தவரில்லே. இவரே மூத்தவரும் பேரரசர்க்கும் பேரரசனுமாவார். அதனுல் ஜ்யேஷ்ட்ட ராஜர். இவர் என் உள்ளத்தில் விளங்கட்டும் (83-86)*

யஸ்யோதாமவலம்பய் சரா சராணாம் ஹிஸர்வ ஜந்தூநாம்।
ப்ரளயே ஸ்த்தித்யாதாவபி ஸதைவ லம்போதரம் தமவலம்பே॥ 87

யூர்ப ஸ்துஷமிவ கலுஷம் நிரஸ்யதீத்யஸ்ய யூர்பகர்ணாக்க்யா।
விகலித ரஜஸ்தமோமலம் அதிபூதம்மாம் கரோது ஸ கணேய:॥ 88

ப்ரம்ஹாத்ம மஸ்த கத்வாத் கண்ட்டாதோ மாயிகஸ்வரூபத்வாத்।
வக்ரம் தேஹவில க்ஷணமஸ்ய து துண்டம் ஸ வக்ரதுண்டோऽத:॥ 89

லம்போதரர் - சூர்பகர்ணர் - வக்ரதுண்டர் - *சரம் அசரம் ஆகிய எல்லா உயிரினங்களுக்கும் ப்ரளயத்திலும் காப்பு நிலேயிலும் இவரது வயிறு ஆதாரமாக இருப்பதால் இவர் லம்போதரர். இவரை நானும் ஆதாரமாகக் கொள்கிறேன். முறம் தவிடு உமிமுதலியதைப்புடைத்து நீக்குவது போல் இவருடைய காது ரஜஸ்-தமோகுணங்களால் ஏற்படுகிற அழுக்கை அகற்றுவதால் இவர் சூர்பகர்ணர். அவர் என்னே மிகத்தூயவனுக்கட்டும். ப்ரம்மம் - மத்தகம், கழுத்தின் கீழ், மாயையாலான வடிவம். இவ்விரண்டிற்கும் மாறுபட்டதான துதிக்கை, அதனுல் வக்ரமான துண்டமுள்ளவர் - வக்ரதுண்டர் (87-89)*

மாயாவாசக ஏகோ தந்த: ஸத்தாத்மவாசகய் ச தயோ:।
யோகோ கணேய: இத்யத உக்தோऽஸா வேகதந் தநாம்நாபி॥ 90

ப்ரம்ஹாத்மநாம் பதித்வாத் மாயாகௌரீ மஹேச்வராதீநாம்।
அன்னப் ராணப்ரப்ருதி ப்ரணவாந்தப்ரம் ஹணாம் பதித்வாச்ச॥ 91

யம்ப்ரம்ஹணஸ் பதிரிதி ப்ராஹுர் வேதாதிபத்யதோऽப்யேவம்।
தமஹம் ஸர்வாதீயம் ஸததம் பரியீலயாமி விக்க்நேயம்॥ 92

ஏகதந்தர் - ப்ரம்ஹணஸ்பதி - மாயா ஒன்றே. (ஏகா) பேரிருக்கை(ஸத்தாத்மா)யைக் குறிப்பிடுவது தந்தம். மாயையும் ஸத்தாத்மாவும் இணைந்த வடிவம் ஏகதந்தர். கணேசர் சிவன் முதலிய ஐந்து ஸகுணப்ரம் ஹங்கள், மாயை, பிரணவம், வேதம், அன்னமய கோசம் முதலிய ஐந்து கோசங்கள் இவற்றின் பதி, என எல்லாவற்றிற்கும் பதியானதால் ப்ரம்ஹணஸ்பதி. இவரை மனத்தில் பழக்கிக்கொள்கிறேன். (90-92)

ப்ரம் ஹாதிஸ்தம்பாந்த ப்ராணிகணாநாம் அதீஶ்வரோ யஸ்மாத்।
ஸகுணப்ரம்ஹ கணாநாமபி தஸ்மாத்த்வம் கணேஶ இத்யுக்த:॥ 93

யந்நாமரூபபோகான் மாயா கூடோऽந்தரேவ முஷ்ணாதி।
தன் மூஷகஸ் ஸ்வவாஹோ யஸ்ய ஸகணபோ விஹரது மமமநஸி॥ 94

மூலப்ரக்ருதி: பத்நீ ஜஹாதி சைநாம் து புக்தப்போகாம் ய:।
பத்நீஹீ நோऽபிஹித: ததோ கஜாஸ்யோऽநிஶம் ஸமாம் பாது॥ 95

ப்ரம்ஹணி வேதே சரதீத்யர்த்த மபிப்ரேத்ய வேதகம்யத்வாத்।
தம் ப்ரம்ஹசாரிஶப்தம் குஞ்ஜரவதநே ப்ரயுஞ்ஜதே கவய:॥ 96

ப்ரம்ஹா த்மமஸ்தகத்வாத் தஸ்ய மஹாவாக்யகணபதேஶ்ச விபோ:।
தேநச ஸஹஸஞ்சாராத் ஆஹுர்வா ப்ரம்ஹசாரீதி॥ 97

ஆத்மாராமத்வாதபி சரதி ப்ரம்ஹண்யபாஹ்ய வ்ருத்திரிதி।
யமிஹாமநந்தி முநய: பாயாத்ஸ ப்ரம்ஹசாரிதேவ கணபோ மாம்॥ 98

ஸந் த்வாபரே பராஶரபுத்ரஸ் ஸிந்தூர தாணவம் ந்யவதீத்।
யத் ப்ரம்ஹசர்யவர்தீ கதிதோதோ ப்ரம்ஹசாரி ஶப்தேந॥ 99

கணேசர் - மூஷகவாஹனர் - பிரும்மசாரி பிரும்மா முதல் புழுவரை பல கோடி உயிரினங்கள் கணங்களாக உள்ளன. கணேசர் சிவன் முதலிய ஸகுணப்ரம்ஹ கணம், இந்த கணங்களின் தலைவர் கணேசர். மாயையில் மறைந்திருந்து பெயரும் வடிவமும் கொண்டு போகங்களைப் பிறர் அறியாமல் தன்னுடைய தாக்கிக் கொள்வதால் அந்தராத்மா மூஷகம். அது அவருக்கு வாஹனம். அதனால் மூஷகவாஹனர். மூலப்ரகிருதி இவரது மனைவி. அவளை அனுபவித்ததும் அவளை விட்டு விடுவதால் அவர் பத்நீயில்லாதவர் (பத்நீஹீந:) அவர் என்னைக் காக்கட்டும். பிரும்மமான வேதத்தின் உட்பொருளாக உள்ளதால் ப்ரம்ஹசாரி. ப்ரம்ஹம் - மத்தகம், ப்ரம்மமே

*சிரஸாகக் கொண்டதால் அத்துடன் அவர் ஸஞ்சரிப்பதால் ப்ரம்ஹசாரி. ஆத்மாவான தன்னைக் காண்பதிலேயே ஆர்வமுள்ளபடியால் ப்ரம்ஹசாரி. வெளிப்போக்கின்றி மனத்தை அடக்கி பிரும்மத்தினுள் செலுத்துவதால் ப்ரம்ஹ சாரி. துவாபரயுகத்தில் பராசரரின் புத்திரராக அவதரித்து ஸிந்துராஸுரனைக் கொல்ல அவன்பெற்ற வரப்படி பிரும்மசாரியாக வாழ்ந்து ஸிந்துரனைக் கொன்றதால் அவர் ப்ரம்ஹசாரி. (93-99)*

விமலகமண்டலுதடிநீதீர மயூரேஶ நகரவர்யே ய:।
பூஸ்வா நந்தே ஸுசிராதா விர்ப்பூதோऽத்ப்புதாநி க்ருத்யாநி॥ 100

லோகாநுகூல பூதான் ஸிந்த்துவதாதீம்ஶ் ச பஹுவிதாந் வ்யததாத் ।
நிக்கிலாநுக்ரஹ நிரத: ஸததம் த்வைமாதுர: ஸ மாம் பாயாத்॥ 101

யத்கோபபாவகார் சிஷ்யஸுரௌ சண்டப்ரசண்டநாமாநௌ।
ப்ராப்தௌ பதங்கபாவம் பாலயது ஸ மாம் ஸதைவ விக்க்நேஶ:॥ 102

யஶ்சாஷ்ட கந்த்தநிர்மித சந்தன கணப: புரா ப்ருகோஸ் ஸுதயா।
ரமயா ப்ரபூஜிதஸ்ஸந் விவாஹஸமயே புராணபுருஷஸ்ய॥ 103

துர்கந்த்தாஸுர மவதீன் மதுகைடப மேதஸ: ஸமுத்ப்பூதம்।
யோऽபிச கவ்யகணபதிர் மஹிதோ கோலோகராதயா பூர்வம்॥ 104

கவ்யை: பயோததிக்ருதை: ஜக்காந பாபாஸுரம் துராத்மாநம்।
வரிவஸ்யாம்ய நவரதம் தம் விக்க்நேஶம் தயாபயோராஶிம்॥ 105

*தூய கமண்டலுநதிக் கரையில் பூமியில் உள்ள ஸ்வாநந்த புவனமாகிற மயூரேச்வரத்தில் தோன்றிப் பலலீலைகள் புரிந்து உலகைக் காக்க ஸிந்த்து அஸுரனை அழித்த மயூரேச்வரர் எல்லோருக்கும் அருள்புரிபவர் என்னைக் காக்கட்டும். அவரது கோபக்கனலில் அசுரர்களான சண்டனும் ப்ரசண்டனும் விட்டில் பூச்சியாக மடிந்தனர். எட்டு நறுமணப் பொருள்களுடன் கலந்த சந்தனத்தில் தோன்றிய சந்தனகணபதி பிருகுவின் பெண்ணாகப் பிறந்து நாராயணனை மணக்கவிருந்த லக்ஷ்மியால் வழிபடப்பெற்றார். மதுகைடபர்களின் கொழுப்பிலிருந்து தோன்றிய துர்க்கந்தாஸுரனை அழித்தார். கோலோகத்தில் ராதையால் பசுவின் பால் தயிர்மற்றும் நெய் நிவேதனத்துடன் ஆராதிக்கப்பெற்ற* **கவ்ய(கோமய) கணபதி** *பாபாஸுரனை அழித்தார். அவரைப் பூஜை செய்கிறேன் (100-105)*

யம் ஹாரித்ர கணபதிம்ஹிமவத்து ஹிதா மஹேஶ்வரஶ்சாபி ।
ஸ்வீயே விவாஹஸமயே ஹ்யபூஜயேதாம் ச தம்பதீ ப்ராஞ்சௌ ॥ 106

யஶ்ச ஹரித்ரா பிம்பாதாவிர்ப்பூதோ கணேஶ்வரஸ் ஸத்ய:।
அவதீதமங்களா ஸுரமந்யமபஸ் மாரநாமகம் ஹ்ய ஸுரம் ॥ 107

கௌரீபுர ஹரவசநாத்யம் ச ஶுபாதௌ ப்ரபூஜயந்த்யத்ய
மமஹாரித்ரகணபதிர் ஹரது ஸதுரிதம் ஸமஸ்தமபி ஸத்ய: ॥ 108

க்ருதயுகஸமயே யோऽஸௌ காச்யபபுத்ரோ மஹோத்கடோபூத்வா।
தேவாந்தகம் நராந்தகமபி நாம்நா தாவஹன் மஹாதுஷ்டௌ ॥ 109

ப்ராபயதாநந்த புவம் ஸஶரீரம் காஶிராஜமபி பக்தம் ।
அகரோச்சாத்ப்புதலீலா மஹோத்கடம் த்வாமஹம் ஸதார்ஹாமி ॥ 110

யோऽபி வரேண்யாய புரா கணேஶகீதாம் ஹிதாமுபதிதேஶ।
ஸ வரேண்ய ராஜபுத்ரோ கஜாநநோமே தநோது குஶலததிம் ॥ 111

தூம்ர விநாயக மூர்திம் க்ரஹீஷ்யஸி த்வம் கலேர்யுகஸ்யாந்தே ।
ஸர்வாம்ஶ் ச நிக்ரஹீ ஷ்யஸி விலுப்தமதக்ருத்யநாஸ்திகப் ராயான் ॥ 112

ஶிஶ்நோதரமாத்ரபரா ஜாதிவிபாகாதி வர்ஜிதாஸ்ஸர்வே।
தூமத்த்வஜேந பவதா ஸமூலகாதம் ஹதா பவிஷ்யந்தி ॥ 113

பார்வதியும் பரமேசுவரனும் ஹரித்ரா (மஞ்சள் பொடி) கணபதியைத்) தமது விவாகத்திற்கு முன் வழிபட்டு ஆதிதம்பதியாயினர். மஞ்சளிலிருந்து வெளிப்பட்ட அவர், அமங்களன் அபஸ்மாரன் என்ற இரு அசுரர்களை மாய்த்தார். சிவனும் பார்வதியும் தந்த வாக்குப்படி இன்றும் மஞ்சளில் பிள்ளையார் பிடித்து மங்களப்பணிகள் தொடங்கு முன் வழிபடுகின்றனர். அவர் எனது அனைத்துப்பாபத்தையும் போக்கட்டும். கிருதயுகத்தில் காசியபருக்கு புதல்வராக மஹோத்கடர் என்ற பெயரில் தோன்றி தேவாந்தகன் நராந்தகன் என்ற இரு அசுரர்களைக் கொன்றார். காசிராஜனை அந்த பூத உடலுடனேயே ஆனந்த புவனத்திற்கு அழைத்துச் சென்றார். அற்புதலீலைகள் பல புரிந்த மஹோத்கடரைப் பூஜிக்கிறேன். வரேண்யன் என்ற அரசனின் புதல்வனாகத்தோன்றி வரேண்யனுக்கு கணேசகீதை மூலம் ஞானோபதேசம் செய்தார். அவர் மங்களம் தரட்டும். கலியுகத்தின் இறுதியில் தூம (ம்ர) கேது என்ற பெயருடன் புகை நிறத்தில் கொடி ஏந்தி தெய்வவழிபாடுகளற்ற நாத்திகர்களையும் எந்தப்பாகுபாடு

*மின்றி வயிற்றை நிரப்புவதிலேயே ஈடுபடுகிறவர்களையும் அழிப்பார். தாம்ரவிநாயகராகத்தோன்ற விருக்கிறவர் நீர் (106-113)*

ஏவம் ஸ்ருஷ்ட்ய வநாதீன் ப்ரம்ஹாண்டாநாமநேக கோடீநாம் ।
குர்வன் க்ரீடாவஸதோ விநாயக த்வம் விராஜஸே முதித:॥ 114

பௌதிக பரமாணூநாம் புஞ்ஜைர் ஜாதம் யதா நரஸரீரம்।
ப்ரம்ஹாண்டாத்ம விராஜோ வபுர்ஹி ஜாதம் ததைவ பஹுகோலை:॥ 115

சந்த்ராத்யா உபகோலாஸ் தேஷுஹி விஸ்வம்ப்பராதயோ கோலா:।
ஸூர்யாதி மஹாகோலா: ஸுமணித்வீபாதய: பரமகோலா:॥ 116

ஸர்வாவயவ ஸுபூர்ணோ மாதுர் கர்ப்பே யதாஸிஸுர் ப்பவதி ।
ஏவம் பஹுவித கோலை:: பூர்ணாவயவம் விராட்ஸ்வரூபம் தத்॥ 117

தஸ்யவிராஜோ தேஹே கட்யூர்த்த்வே சைக விம்ஸதி ஸ்வர்கா:।
ஷோடா விபாகவந்த: தேஷாம் மத்யேஹ்யயம் பரமகோல:॥ 118

த்வீபஸ் சிந்தா மணிரிதி மூலாதாரோ விராட்ஸரீரஸ்ய।
ப்ரம்ஹாண்ட மத்த்ய தே ஸே திஷ்ட்டத்யசல: ஸதா நிராலம்ப:॥ 119

*இவ்வாறு கோடிகோடி பிரும்மாண்டங்களின் படைப்பு முதலிய வற்றை விளையாட்டாகச் செய்து மகிழ்கின்ற விநாயகர் நீர். மனித உடல் பல ஐம்பூத பரமாணுக்களாலானது. அது போன்ற பிரும்மாண்டங்களாகிற விராட்புருஷனின் உடல் பற்பல கோளங்களாலானது. சந்திரமண்டலங்கள் முதலிய உபகோளங்கள், பூமி முதலிய கோளங்கள், ஸூர்ய மண்டலங்கள் முதலிய மஹா கோளங்கள், மணித்வீபம் முதலிய மஹா மஹா கோளங்கள் இவை அனைத்தும் தாயின் வயிற்றில் நிறைகர்ப்பமாக இருக்கிற சிசுபோல், விராட்புருஷனின் சரீரத்தில் நிறைந்து விளங்குகின்றன. விராட்புருஷனின் இடுப்பிற்கு மேற் பகுதியில் இருபத்தொன்று ஸ்வர்கங்கள் ஆறுபிரிவுகளுடன் அமைந்துள்ளன. அவற்றினிடையே விராட்புருஷனின் மூலாதாரப்பகுதியாக சிந்தாமணித் துவீபம் என்ற மஹா கோளம் அமைந்துள்ளது. பிரம்மாண்டங்களின் இடையே அசையாது ஆதார மின்றி இந்த கோள முள்ளது (114-119)*

பரமாத்மகல்பிதேஷு ஸ்வபதிஷு கோளா யதா ப்ப்ரமந்த்யந்யே।
ந கதாபி ததாப்ப்ராம்யதி சிந்தாமணிரித்யயம் பரமகோள:॥ 120

தத்தத் ப்ரம்ஹாண்டாத்மக விராட்ஸமூஹோ மஹாவிராட்ப்ரம்ஹ।
தஸ்யஹி ஸர்வாவயவா நிகிலைர் ப்ரம்ஹாண்டகோடிபி: பூர்ணா:॥ 121

அகிலாண்டகோடிஸமுதய ஜகதாத்மாரூந் மஹாவிராட்புருஷ:।
ப்ரம்ஹாண்டகோடிமத்த்யே மூலப்ரக்ருதி ஸ்வரூபகோ த்வீப:॥ 122

நாம்நா சிந்தாமணிரிதி மூலாதாரே மஹாவிராட்ரூபே।
ஸஹஸித்த்திபுத்த்திரஸ்மிந் ஸகுணமஹா வாக்ய கணபதிர்ப்பவஸி॥

மூலாவித்யாப்ரதிகததேவஸ்த்வம் ஹி ப்லுதப்ரணவரூபீ।
விரிஞ்சிஹரிஹரரவிபி: தேஷாம் ஶக்த்யாத்மஜாதிபிர் விநுத:॥ 124

ஏகார்ண பத்தநா பித மூலஸ்த்தானம் விபாதி தந்மத்த்யே।
தத்ராபி கல்பவ்ரு க்ஷோத்யாந கதோங்காரமண்டபோ பாதி॥ 125

ஸிம்ஹாஸநே ஹி சிந்தாமணிமயஸோபா நஸம்யுதே தஸ்மிந்।
ஏகாக்ஷர கணபதிமஹமநிஶம் த்த்யாயாமி ஸித்த்தி புத்த்தியுதம்॥ 126

*பரமாத்மா அமைத்துத் தந்துள்ள தம் தம் வழியில் மற்ற கோளங்கள் சுற்றிவருவதுபோல் சிந்தாமணித்துவீபகோளம் சுற்றுவதில்லை. ஒவ்வொரு பிரம்மாண்டத்திற்குமான விராட்டுகளும் ஒன்று சேர்ந்து எல்லா பிரம்மாண்டத்திற்கு மான மஹாவிராட்பிரும்மம் ஆகியுள்ளது. விராட்ஸமஷ்டி இது. இந்த மஹாவிராட்டின் அவயவங்களாக அந்த விராட் ப்ரும்மங்கள் அமைந்துள்ளன. ஆக அனைத்துப் பிரும்மாண்ட மண்டல விராட்புருஷர்களின் ஸமஷ்டி வடிவான மஹாவிராட்புருஷர். அவர்து மூலாதாரத்தில் இந்த சிந்தாமணித் துவீபம். அதில் ஸித்தி புத்தி தேவிகளுடன் கூடிய ஸகுணமஹா கணபதி விளங்குகிறார். இவர் மூலாவித்யையில் பிரதிபிம்பமாகத் தோன்றுபவர். பிரணவத்தின் முழுநீட்சி (ப்லுதம்) வடிவினர். பிரும்மா விஷ்ணு சிவன் சூர்யர், சக்தி இவர்களுடன் தன் சக்தி தன்புதல்வர்களுடன் இவர்களால் வணங்கப்பெற்றவராக விளங்குகிறார். இந்தத் தீவின் மூலஸ்த்தானம் ஏகாக்ஷரபட்டணம். அங்குள்ள கற்பகவிருக்ஷத்தோட்டம், அதன் நடுவில் ஓங்காரமண்டபம், அதில் சிந்தாமணிரத்தினங்களாலான படிகளுடன் அமைந்த ஸிம்ஹாஸனம். அதில் வீற்றிருக்கிற ஸித்திபுத்தி தேவிகளின்*

*நாதனுன ஏகாக்ஷர கணபதியை எப்போதும் தியானிக்கிறேன். (120-126)*

தத்ர மயூரேமாதி மூர்த்தி விமேஷான் ஸமந்ததோऽபிகதான் ।
தச்சக்தி மூர்த்திஸஹிதான் ஸஹபரிவாரான் ஸமாம்ரயே ஸததம் ॥ 127

தத்ர ப்ரதமாவரணே யுவராட் அவ்யக்த கணபதிம் வந்தே ।
கணகம் ஹம்ஸக கணபதிம் பஜேஹமந்யாம் ஸ்ததீய பரிவாரான் ॥ 128

அத்ப்புத ரசநாவத்யஸ்தத்ர சதுஷ்ஷஷ்டிவீதயஸ் ஸந்தி ।
தத்தத்ஸ்த்தலா திகாராநுரூப கணபாம்ச கோடிமை: ஸந்தி ॥ 129

நாத்ரத்ய வைபவாதீன் சேஷோऽபீஷ்டே யதாவதாக்க்யாதும் ।
அத்யல்ப புத்த்திவிபவ: ப்ரபுர் பவேயம் கதம் நுவர்ணயிதும் ॥ 130

*அங்கு மயூரேசுவரர் முதலிய சிறப்பு மிக்க விநாயகரின் மூர்த்திகள் தம் தம் சக்திதேவிகளுடனும் பரிவாரங்களுடனும், உள்ளனர். அவர்களை வணங்குகிறேன். முதலாவரணத்தில் யுவராஜர் அவ்யக்தகணபதி, கணகரான ஹம்ஸ கணபதி, முதலிய பகவானுடைய பரிவாரங்களை வணங்குகிறேன். அங்கு அழகிய அமைப்புள்ள அறுபத்து நான்கு வீதிகள் உள்ளன. அங்கு பல்வேறு நிலைகளில் அதிகாரம்பெற்றுள்ள கோடிக்கணக்கான கணத்தலைவர்கள் உள்ளனர். அவ்விடத்துப் பெருமையை முழுவதும் விளக்க ஆதிசேஷனாலும் முடியாது. என்னால் என்ன முடியும்? (127-130)*

ஏகார்ண பத்தநஸ்ய து தக்ஷிண பார்ம்வே புரம் வரம் பவதி ।
நாம்நா ஷடர்ணபத்தநம் ஆஜ்ஞாஸ்த்தானம் ஸ்த்தலம் ஹி க்ருத்யாநாம் ॥ 131

அத்ர ஹி ஷடர்ணரூபீ நிஜமக்திப்யாம் சகாஸ்தி விக்க்நேம: ।
தம் த்வாம் நமாமி ஸததம் ப்ராய: ப்ராகுதித வைபவாதி யுதம் ॥ 132

நிசித சதுர்தம புவநம் ஸப்தமஹா த்வீப வஸுமதீமத்த்யம் ।
லோகாலோக வலயிதம் ப்ரம்ஹாண்டமிதம் ததான்யதபிஸர்வம் ॥ 133

ககநே கத்யோத இவ ஹ்யண்ட: ப்ரத்யோததேऽய மேகைக: ।
அண்வணு மாத்ராவயவ: பரிணதஜகதாக்ருதே: கில ப்ரக்ருதே: ॥ 134

நிகில ப்ரம்ஹாண்டோபரி பாகே ஸ்வாநந்தபவந லோகஸ்தே ।
அந்வர்த்த நாமதேயோ முத்கலகபிலாதியோகபஜநீய: ॥ 135

ஸ த்வாதமாந்ததேமோ மஹா விராஜோऽகிலாண்ட ரூபஸ்ய ।
ஜக்ஷுவஸாகரமத்த்யே ப்ரதீப்யதே கோடியோஜநம் விதத: ॥ 136

கோடி திவாகர தீப்திர் யத்ர புருஷார்த்த ஸம்பரிஸமாப்தி:।
யத்ர ந புநராவ்ருத்தி: யஸ்ச மஹாவாக்ய கணபதேர் வஸதி:॥ 137

தத்ரஹி மூலஸ்த்தானம் ஶதயோஜந விஸ்த்ருதாய தோத்துங்கம்।
ஓங்கார வலயரூபாம்ருத ஸாகர மத்த்யகம் விபாதி தவ॥ 138

தத்ரஸஹஸ்ரஸ்தம்ப்பே சிந்தாமணி மண்டபே விசித்ரதமே।
ஏகாக்ஷர பீடே தவ தேஜோமய விக்ரஹம் ஹ்ருதா கலயே॥ 139

*ஏகாக்ஷரபட்டணத்தின் வலது புறத்தில் ஷடர்ணபத்தனம் என்ற பெரு நகரம் உள்ளது. அது விராட்புருஷனின் ஆஜ்ஞாசக்ரஸ்தானம். இங்கு ஷடக்ஷர கணபதி தன் இரு சக்திகளுடன் வசிக்கிறார். அவர் ஏகாக்ஷர கணபதிபோன்று எல்லாபெருமைகளும் கொண்டவர். அவரை வணங்குகிறேன். நாமுள்ள பிரும் மாண்டம் பதினான்கு லோகங்கள் கொண்டது. லோகாலோகாசலம் என்ற எல்லைமலை சூழ்ந்தது. ஏழு மஹாத் வீபங்களாக பிரிக்கப்பெற்ற பூலோகம் அடங்கியது இது. ஆகாயத்தில் ஒரு மின்மினிப்பூச்சிபோல் உலகங்களாக மாறியுள்ள மஹாப்ரகிருதியின் வடிவில் இந்த பிரும்மாண்டம் காணப்படுகிறது. எல்லா பிரம்மாண்டங்களின் ஸமஷ்டியான மஹா விராட்டின் துவாதஶாந்த ஸ்தானம் (ஆஜ்ஞா சக்கிரத்திற்கும் ஸஹஸ்ரார கமலத்திற்கும் இடைப்பகுதி) ஆகும். கருப்பஞ் சாற்றுக்கடலின் இடையே கோடியோசனை பரப்புள்ளது. கோடிசூர்யர்களின் ஒளி கொண்டது. நான்கு புருஷார்த் தங்களின் எல்லையான மோக்ஷஸ்தானம். இதன் பின் அடையவேண்டிய இடமும் இல்லை. இங்கு சென்றவர் மறுபடி எங்கும் திரும் பிவந்து பிறப்பதில்லை. அங்கு பகவான் இருக்கிற மூலஸ்தானம் நூறுயோசனை பரப்புள்ளது. ஓங்கார அகிழ்போன்ற அமுதக்கடலின் இடையே உள்ளது. அதில் ஆயிரக்கால் சிந்தாமணி மண்டபத்தில் ஏகாக்ஷரபீடத்தில் ஒளிமயவடிவில் அமர்ந்துள்ள உம்மைத் தியானிக்கிறேன் (131-139)*

பவதீயஸவ்யபாகே ஸ்மிதவதநாம் ப்ரம்ஹபாவதாம் தயிதாம்।
த்த்யாயாமி ஸித்த்திதேவீம் பீதாம் பரதாரிணீம் ச ஜகதம்பாம்॥ 140

கல்ஹார குஸுமமாலாம் கஸ்தூரீ திலக விஜ்வலத்பாலாம்।
கருணாபூர்ணகடாக்ஷாம் கநகஸவர்ணாம் ச மோக்ஷலக்ஷ்மீம் தாம்॥ 141

ஶஶிஶேகராம் த்ரிணயநாம் ஸுவர்ண ஸரஸீருஹே ஸுக்காஸீநாம்।
ப்பாஸுர ஸர்வவிபூஷண ப்ருந்தாம் ஸர்வாங்க ஸுந்தரீம் வந்தே॥ 142

த்த்யாயாமி புத்த்திதேவீம் ப்ரம்ஹஜ்ஞான ப்ரதாயிநீம் தயிதாம் ।
பவதீய தக்ஷபாகே க்கநஸாரதுஷார ஸந்நிபஶரீராம்॥ 143

மந்தஸ்மித முக்கபத்மாம் மந்தார முக்கப்ர ஸூநக்ருத மாலாம்।
வந்தாரு மநுஜலோலாம் ப்ருந்தாரகமுக்க்ய ம்ருக்யபதமூலாம்॥ 144

கஸ்தூரிகாவிஶேஷக விலஸித நிடிலாம் கணேஶ க்ருதலீலாம்।
ஸித தாமரஸாஸீ நாம் த்ரிலோசநாம் சந்த்ரஶேகராம் ருசிராம்॥ 145

*உமது இடது பாகத்தில் புன்சிரிப்புடன் பரம்பொருளுணர்வைத் தருபவளும் உமக்கு இனியாளுமான ஸித்த்திதேவியைத் தியானிக்கிறேன். அவள், பீதாம்பரம் உடுத்தியவள், உலகின் அன்னை, ஆம்பல் பூமாலை தரித்தவள் கஸ்தூரி திலகத்தை நெற்றியிலிட்டவள், கருணை நிறைந்த கடைக்கண்பார்வையுள்ளவள், தங்கநிறமேனியுள்ளவள், மோக்ஷலக்ஷ்மீ, சந்திரனைச் சூடியவள், முக்கண்களுள்ளவள், தங்கத்தாமரை மீதமர்ந்தவள், ஒளிமிக்க நகைகள் பூண்டவள், அழகிய வடிவமைப்புள்ளவள். அவளை வணங்குகிறேன். உமது வலது புறத்தில் பிரும்ம உணர் வைத் தருபவளும் உமக்கு இனியாளுமான புத்தி தேவியைத்தியானிக்கிறேன். அவள் பச்சைகர்பூரம் பனித்தூள் போன்ற மேனி நிறமுள்ளவள், புன்சிரிப்புள்ளவள், மந்தாரப்பூ முதலியதாலான மாலை தரித்தவள். வணங்குபவர்களிடம் அன்பு கொண்டவள், தேவர் முதலானோர் தேடுகிற திருவடியுள்ளவள், கஸ்தூரி திலகமிட்டவள், கணேசரது விளையாட்டை அனுபவிப்பவள், வெண் தாமரையில் அமர்ந்தவள், முக்கண்களுள்ளவள், பிறைசூடியவள், அழகி* ***(140-145)***

பவதோ பவநம் பரித: ப்ரதமாவரணே விசித்ர ரத்நாநி।
க்ரீடா காராதீநி ஸ்த்தாநாநி மநோஹராணி ஸுபஹூநி॥ 146

தத்தத்ஸ்த்தாநா நுகுணம் க்ருஹீத கமநீய விக்ரஹவிஶேஷ:।
ஸித்த்த்யா புத்த்த்யாச யுதோ விஹரஸி முதிதிஸ்ததர்ஹபரிவார:॥ 147

கந்தர்பகோடி பரிபூஸௌந்தர்ய ஜ்ஜரீ தரங்கிதாகாரா:।
க்ரீடாகாராதி கதா: மங்கள மூர்தீஶ்ச மந்மஹே மநஸி॥ 148

பவத: கடாக்ஷ வீக்ஷாம் ப்ரதீக்ஷமாணாஸ்ச கிங்கரப்ரவா: ।
ஆஜ்ஞா கரணப்ரவணா: அப்பய்ர்ணே ஸந்தி கோடிகோடிகணா: ॥ 149

*உமது மாளிகையைச் சுற்றி முதலாவரணத்தில் ரத்னத்தாலமைந்த அழகிய விளையாட்டரங்கங்கள் உள்ளன. அவற்றில் இடத்திற்கேற்ப அழகிய வடிவங்கள் பூண்டு ஸித்தி புத்தி தேவிகளுடன் அததற்கேற்ற பரிவாரங்களுடன் விளையாடுகிறீர். மன்மதனை வெல்கிற அழகிய வடிவத்துடன் பாட்டிலும் விளையாட்டிலும் ஈடுபகிற உமது பல வடிவங்களைத் தியானிக்கிறேன். உம் கடைக்கண்பார்வையை எதிர்பார்த்துப் பணிபுரியவும் உமது ஏவல்களைச் செய்யவும் கூடியுள்ள கோடிக்கணக்கான கணர்களையும் தியானிக்கிறேன் ( 146 - 149*

பவதோ ஹி வாமபூர்வே கிஞ்சிந்ந்யூநே மஹேந்த்ர மணிபீட்டே ।
ஆஸீநம் யுவராஜம் ஸித்த்திஸுதாவ்யக்த கணபதிம் வந்தே ॥ 150

தூர்வாதளவத் ஶ்யாமளகோமள மூர்திம் நிஶாகராபீடம் ।
கந்தர்ப ஸுந்தராங்கம் கௌஸ்துப சிந்தா மணிப்ரபாதீப்ரம் ॥ 151

நிஜ லோக வாஸி ஸர்வாபீப்ஸித விஜ்ஞாபநாதி வார்தாநாம் ।
விஜ்ஞாபயதி விஶேஷான் ஸகில மஹாவாக்ய கணபதே பவதே ॥ 152

பவதீயஸந்நிதாநே தஸ்மாதந்யோ நகோऽபி கணவர்க: ।
கந்தும் ஸ்த்தாதும் வாபி ப்ரபவதி கிமுத ப்ரபாஷணாதி விதௌ ॥ 153

அபி சாவ்யக்த நிவேதித நிஜபக்த ஜநாநு கூல க்ருத்யாநி ।
ஆகர்ணந மாத்ராதபி ஸத்ய: கர்தும் க்ருதாதரோஹி பவான் ॥ 154

*உமது இடது பக்கத்தில் வடகிழக்கில் சிறிது குறைந்த மதிப்புள்ள நீலரத்தின பீடத்தில் அமர்ந்துள்ள ஸித்திதேவியின் புதல்வரான அவ்யக்த கணபதியை வணங்குகிறேன். அருகம்புல்போல் பசுமை நிற முள்ளவர், சந்திரனை நெற்றியில் அணிந்தவர், மன்மதனைப்போன்ற அழகர், சிந்தாமணி ரத்னத்தாலான அணிகளுடன் ஒளிர்பவர், தன் உலகத்தில் வாழ்பவர்களின் விருப்பங்களனைத்தையும் கேட்டு உம்மிடம் தெரிவிப்பவர், உமது அருகாமை வரை வரவும் இருக்கவும் பேசவும் உரிமையுள்ளவர். அவர் தெரிவிக்கிறதைக் கேட்டதும் உரிய ஆதரவுடன் நீரும் நிறைவேற்றுகிறீர் (150-154)*

பவதோ ஹியாம்ய பூர்வே ஸ்ப்பாடிகபீடே குரும் ஸுகாஸீநம் ।
அதிஸுந்தரம் யுவாநம் புத்த்தே: ஸூநும் விலேகநீபாணிம் ॥ 155

சூடாமணி ப்ரகாஸம் ஸுத்தஸ்ப்டிக ப்ரபாப்ரதீகாஸம்।
கணகம் கணகாதீஸம் ஹம்ஸ கணேஸம் நமாம்யமாத்யேஸம்॥ 156

லோகம் தேஸம் க்ராமம் ப்ரம்ஹாண்டஸ்த்தித பராத்ம பக்தாநாம்।
பூர்வா சரிதான் கணகோ தர்மாதீம்ஸ் ச ஸ்வபுஸ்தகே லிகதி॥ 157

கணகவிலேகநமாத்ராத் ஸகலாந்நிஜ பக்த புங்கவாகலிதான்।
ப்ரணிதாபயஸ் யநல்பான் காமகலாபான் ஸுராதி துரவாபான்॥ 158

ப்ரம்ஹ மஹத்தத்வ கதம் கணகம் ப்ராஹு: ஸமஸ்தயோகீந்த்ரா:।
யோ நிபபந்த க்ரந்த்தான் கணபதி விஷயான் மஹேதிஹாஸாதீன்॥ 159

த்த்யாயந்தி ஹம்ஸரூபம் பரமகுரும் யம் ஸஹஸ்ரதள பத்மே।
ஆஸீநம் கணகேசம் ஹ்ருதயே கில யோகி புங்கவாஸ் ஸததம்॥ 160

*உமது வலப்புறத்தில் தென்கிழக்கில் ஸ்படிகபீடத்தில் சுகமாக அமர்ந்துள்ள அழகிய யுவாவான புத்திதேவியின் புதல்வரான ஹம்ஸ கணபதி என்ற ஆதி குருவான கணகரைத்தியானிக்கிறேன். கையில் எழுத்தாணிகொண்டவர். பிறை சூடியவர். ஸ்படிகமணி ஒளி கொண்டவர், கணகர்களின் தலைவர், அமைச்சர்களின் தலைவர், பிரும்மாண்டம், உலகம், தேசம், கிராமம் என்று பக்தர்களின் இருப்பிடத்தையும் அவர்களது நடவடிக்கைகளையும் நன்கறிந்து அவற்றைத் தம்மிடமுள்ள ஏட்டில் பதிப்பவர், அவர்கள் விரும்பிய தனைத்தையும் நிறைவேற்றுபவர். பிரகிருதியின் அடுத்தவிரிவான புத்திதத்துவமான பிரும்மம் பிரதிபலிக்கிற மஹத் தத்துவத்தின் வடிவானவர். கணபதி பற்றிய புராண இதிஹாஸங்களைத் தொகுத்தவர், யோகிகள் பரமகுருவாக ஸஹஸ்ராரத்தில் அமர்ந்த ஹம்ஸராகத்தியானிப்பர் (155-160)*

நிகில் ப்ரம்ஹாண்டஸ்த்தித பக்தஜநாநாம் ஹிதாஹிதம் வக்தும்।
வரதாதி கோடி கணபா: விகடஸ்யாந்தே வஹந்தி ஸ்சிவத்வம்॥ 161

அகிலாண்டகோடி நிவஸத் பக்தாநா நந்த பவநமாநேதும்।
அதிகாரபத நியுக்தா ஆமோதமுகா பவந்தி கோடி கணா:॥ 162

த்வத் பக்திமாதரஸுலபான் ஈத்ருஸதத்ரத்ய ஸர்வபரிவாரான்।
மநஸா நுமோऽநவ ரதம் த்வாரீ பூதான் பவத்ஸமீபாப் தௌ॥ 163

த்ரிணயந சந்த்ராபீடா ப்ரம்ஹாநந்தாம்புதௌ ப்ப்ருஸம் மக்நா:।
ஆநந்தபவந புவநே கணபதி ஸாரூப்ய பாகிநோऽநந்தா:॥ 164

பஹுகல்ப கோடிகாலம் பவத: ஸதுபாஸநாத் ப்ரமோதந்தே।
ஶுண்டா தண்டவிராஜத் துண்டா வகலன் மதாம்பு யுதகண்டா:॥ 165

ஸாலோக்ய முக்திபாஜோऽஸங்க்யேயாஶ் சாகிலாண்ட பக்தஜநா:।
ஏவம் ஸாமீப்யபதப்ராப்த்யா ஸுகபூமி பாகிநோऽநந்தா:॥ 166

ஸ்வர்காதி வாஸிநாமபி துஷ்டாஸுரபாத ஶாபபாதாதி:।
ப்ராரப்த்த கர்மபோக: கதாசிதபி மாத்ருகர்ப்பவாஸாதி:॥ 167

ஆனந்த ப்பவநவாஸீ நைதாத்ருகுபத்ரவம் கதாசிதபி।
அநுபவதி கிம் த்வகண்டம் ப்ரம்ஹாநந்தம் ந து:க்க ஸம்ப்பிந்நம்॥ 168

ஸங்கல்பமாத்ர ஸுலபாநாஹார விஹாரகாம போகாதீன்।
பரிஹ்ருத்ய நித்யத்ருப்தா நித்யாநந்தாத்மநா மஹாத்மாந:॥ 169

ஜ்ஞாநாதி யோகநிஷ்ட்டா ஜீவந்முக்தா கதாஹியே தத்ர।
ப்ரம்ஹவிசாரபராஸ் தே ப்ராபுர நந்தா விதேஹ கைவல்யம்॥ 170

கேஶாதிகார யுக்தா யோகிஜநா யேது பூர்வகல்பேஷு।
ப்ரம்ஹாச்யுதாதயஸ்தே வித்யந்தே தத்ர கோடிஶ: பரித:॥ 171

அவதார மூர்த்தயஸ்தே ஸந்தி ஸமஸ்தாத் ஸஹஸ்ரஶஸ்தத்ர।
தவ தத்ர மூர்திமந்தோ ஹ்யாம் நாயாந்தா: ஸ்துவந்தி மஹிமாநம்॥ 172

ஸர்வா வரணஸமேதா: தத்தத் த்வத்சக்தி ஸித்த்திபுத்த்யம் ஶா:।
தத்தத் காலானு குணா: ஸந்தி ஸஹஸ்ரம் ஹிமூர்தயஸ்தத்ர ॥ 173

இத்யா நவமாவரணம் விசித்ர ரூபா விபூதி விபவாத்யா:।
கவிவாங்மநஸோऽவிஷயா: ஸந்தி ஸ்வாநந்தபவநலோகே தே॥ 174

*பகவானின் அருகில் வரதர் முதலான கோடிக்கணக்கான கணத்தலைவர்கள் உள்ளனர். உலகங்களிலுள்ள கணபதிபக்தர்களை ஆனந்த பவனத்திற்கு அழைத்து வருகிற ஆமோதர் முதலான அதிகாரிகள் உள்ளனர். உம்மிடம் வைத்துள்ள பக்தியாலேயே இவர்களையும் அணுகமுடியும். இந்த பரிவாரங்கள் உம்மை அணுக உதவுபவர்கள். இவர்களை வணங்குவோம். ஆனந்த பவனலோகத்தில் உமது வடிவ ஒற்றுமை (ஸாரூப்யம்) பெற்ற எண்ணற்றவர், முக்கண்களும் சந்திரத்தலையணியும் கொண்டவர். துதிக்கை நுனிகளில் மதநீர்பெருக்குள்ளவர்கள். அவ்வாறு உமது புவனத்தில் வசிக்கத்தகுதி (ஸாலோக்யம்) பெற்றவர், உமது அருகாமையிலிருக்கத் தகுதிபெற்றவர் (ஸாமீப்யம்) இவர்கள்*

*சுகமாக வாழ்கின்றனர். ஸ்வர்கம் முதலிய இடங்களில் இருப்பவர்களுக்கு அசுரனுல் பீடை, சாபத்தால் துயரம், முன்வினை அனுபவம், மறுபடி தாயின் கர்ப்பவாசம், என்று தொடர்கிற பின் விளைவுள்ளவை உண்டு. ஆனந்தபுவன வாசிக்கு இத்துயர்கள் இல்லை. துண்டாடாத பிரும்மானந்தம், நினைத்தால் பெறத்தக்கபோகப் பொருளனைத்துமிருந்தும் அவற்றில் நாட்டமிராத நிறைவுணர்வு இவை பெற்று நித்யானந்தத்துடன் வாழ்கின்றனர். ஞானயோகம் முதலியவற்றுல் ஜீவன் முக்தி பெற்றவர், பிரும்மவிசாரம் செய்து விதேகமுக்தி பெற்றவர், முன்னர் பிரும்மாவாக விஷ்ணுவாக ருத்ரனுகப் பல கல்பங்களின் தம் தம் பணிபுரிந்து பகவானது அருகாமை பெற்ற பலர், வடிவெடுத்த வேதங்கள், இவர்களனைவரும். இந்த ஆவரணங்களில் காணப் பெறுகின்றனர். அவரவரது சக்திதேவிகளும் கூட உள்ளனர். இப்படி ஒன்பது ஆவரணங்களில் உள்ள பெருமைகளையும் சிறப்புகளையும் கவி தன் வாக்காலும் மனத்தாலும் கொணர இயலாது (161-174)*

ஏதேப்ப்யஶ் ச நிஜேப்ப்ய: லோகாநுக்ராஹி மூர்திபேதேப்ய:।
ஜீவன் முக்தாதிப்யோऽத்ரத்ய மஹத்ப்ப்யோ நமோऽஸ்து ஸர்வேப்ப்ய:॥ 175

ஸிம்ஹாஸநஸ்ய மூலே மூஷகராஜோ விராஜதே ஸுதராம்।
தஸ்யுரிவாந்தர்யாமீ புங்க்தே போகாம்ஶ் ச ஸர்வஜந்தூநாம்॥ 176

அவ்யக்த கணபதிஸ்தவ ஸேவார்த்தம் ப்ராப மூஷகாகாரம்।
பவதீய வாஹநேஷ்வபி குருதே ஸர்வேஷ்வநுப்ரவேஶ மயம்॥ 177

யத்யபி ஹம்ஸோ விலிகதி சண்டோவா நக்நபைரவோ தாதா।
பவதாலயே கணபதே ஸததம் ஸேவாப்பலம் ஹி பக்தேப்ய:॥ 178

பூர்வம் தவ ஸேவார்த்தம் ப்ரவேஶகாலேऽஸ்ய மூஷகஸ்யாந்தே।
ந லபேத சேதநுஜ்ஞாம் ஸேவாபலமபி ஸு துர்லபம் தஸ்ய॥ 179

ஸேவா நபிஜ்ஞமபிமாம் அநீஶ மந்யாத்ருஶோ பசாரவிதௌ।
சண்டாதயோऽநுக் ருஹ்ணந்த்வேதே பவதீய பவநபரிவாரா:॥ 180

தவ பக்தகோடி மஹிமா வக்து மஶக்யோऽத்ர முத்கல: ப்ரவர:।
யச்சிஷ்யா: கபிலாத்யா: ஸந்தி சது ஷ்ஷஷ்டிகோடிமிதஸித்த்தா:॥ 181

த்வந்நாம மாத்ரஜாபா: ஸமூலகாஷம் கஷந்தி கலு ஷாணி।
விஷஹரண ஸித்த்த மந்த்ரோ ஜபமாத்ராதிவ விஷம் நிரவஶேஷம்॥ 182

*உலகிற்கு அருள் புரியப் பலவடிவங்களேற்ற இந்த உமது பக்தர்கள் அனைவருக்கும் நமஸ்காரங்கள். ஸிம்ஹாஸனத்தின் அடியில் மூஷகராஜர் உள்ளார். இவர் எல்லா உயிரினமும் அனுபவிக்கிற போகங்களை அந்தர்யாமியா யிருந்து திருடன் போல் அனுபவிப்பவர். பகவானது குமாரரான அவ்யக்த கணபதியே அருகிருந்து பணிவிடை செய்வதன் பொருட்டு இந்த வடிவம் எடுத்துள்ளார். உமது மற்ற வாகனங்களிலும் இவர் உள்நுழைந்துள்ளார். ஹம்ஸ கணபதியான கணகர் எழுதிவைத்திருந்தாலும், சண்டரோ நக்நபைரவரோ உமதாலயவாயிலில் நின்று பக்தர்களுக்கு வழிபாட்டின் பயனை வழங்கிக் கொண்டிருந்தாலும் ஆலயத்திற்குள் நுழையுமுன்னும், வெளிவரும்போதும் மூஷிக ராஜனிடம் அனுமதிபெறாதவரை வழிபாட்டின் பயனைப் பெற இயலாது. வழிபாட்டுமுறையறியாதவனும், வேறு வகையில் பணிவிடை செய்ய இயலாதவனுமான என் மீது உமது பவனத்திலுள்ள சண்டர் முதலிய பரிவாரங்கள் அருள் புரியட்டும். உமது பெருமை மிக்க பக்தர்களில் முத்கலர் மிகப்பெரியவர், அவரது கபிலர் முதலிய சிஷ்யர்கள் உமதுபெயரை ஜபித்துக் கொண்டுள்ளார்கள். அவர்கள் விஷஹரமந்திரம் விஷத்தை அறவே நீக்குவது போல் பாபங்களை வேருடன் களைகிறார்கள். (175-182)*

குங்கும கர்பூராகரு ம்ருகமதகோரோசநாதியுதகந்த்தம்।
யத்ப்பக்தா தத்ததே தத் வஸ்து கஜாஸ்யம் ஸதாஸ்து மம சித்தே॥ 183

ம்வேதார்க மூல மூர்திம் ஜீவத்கஜதந்தமூர்திமபி பவத:।
மோணமிலாமபி மநஸா ப்ரவாள ரத்நாதி மூர்திமபி மஹயே॥ 184

தூர்வார்சந மந்த்ரஜபா வ்ரதம் சதுர்த்த்யாம் யதீயசிந் ஹாநி।
ஸிந்தூர தாரணாத்யபி ஸ கணாத்த்யக்ஷஸ் ஸதாऽஸ்து மமமரணம்॥ 185

தூர்வா ரஹித ஸபர்யா விபலா பவத: க்ருதாऽபி ஹேரம்ப।
நிஜமக்தி தத்தபீஜத்வய ரூடா யத் மதாங்குரா தேவீ॥ 186

துஸ்ஸ்வப்நநாமிநீ ஸா ஸ்வார்சகபாபாபநோதநே சதுரா।
பக்தஜந விக்ந ஹந்த்ரீ தூர்வாயாம் தே ததோ மஹாப்ரீதி:॥ 187

யத்யபி தூர்வாந்ந மயீ துர்காமப்தா த்ருணாத்மநா ஜாதா।
ஆராத்த்ய ஸித்த்தி புத்தீ ம்வேத ஹரித்ப்பேததோ த்விதாபூத் ஸா॥ 188

துர்கார்சநே து நிந்த்யா ஶ்லாக்யதமைவார்சநேऽந்ய தேவாநாம்।
பவதோऽதி ஶ்லாக்யதமா யுக்மத ஏகைகவிம்ஶதிப்யாம் வா॥ 189

துளஸீ நீலாதேவீ வைஷ்ணவமாயா கணேஶ ஶப்தா ஸா।
பவதோऽத ஏவ நிந்தயா அர்ஹா க்ரஹதேவதாந்யதேவாநாம்॥ 190

ஶ்வேதார்க குஸும நிகரை: மந்தா ரஸுமைஸ்ததா ஶமீபத்ரை:।
பக்தை ரர்சிதமாத்ராத் யதாऽதித்ருப்திஸ் ததா ந தே க்வாபி॥ 191

குங்குமப்பூ, கர்பூரம், அகில், கஸ்தூரி, கோரோசனை முதலியவை கலந்த சந்தனத்தைப் பக்தர்கள் உமக்கு இடுகின்றனர். அந்த யானைமுகமுள்ள உம் வடிவம் என் இதயத்துள் எப்போதும் இருக்கட்டும். வெள்ளெருக்காலான உம் வடிவத்தையும் உயிருடனுள்ள யானையிட மிருந்து எடுத்த தந்தத்தாலான வடிவத்தையும் சோணா ஆற்றில் கிடைக்கிற சிவந்த கல்லையும் பவழம் முதலிய ரத்னங்களாலான மூர்த்தியையும் வழிபடுகிறேன். உன் பக்தர்கள் வழக்கமாக அருகம் புல்லால் அர்ச்சனை, உமது மந்திரஜபம், சதுர்த்தீவிரதம், சிந்தூரப்பொட்டு முதலிய உம்மை நினைவுப்படுத்துகிற அடையாளங்கள், என உம்மை அறிமுகப்படுத்திக் கொள்கிற நீர் எனக்குப் புகலிடம். அருகம் புல்லில்லாத வழிபாடு பலனற்றது. அது உமது சக்திகளான ஸித்தி-புத்திதேவிகள் தந்த இருவிதைகள் மூலம் முதலில் தோன்றியது. பின் நூறு முளைகளிட்டுப் பரவிவிட்டது. தெய்வசக்தி மிகுந்தது. கெட்டகனவு, பாபம் விக்னம் இவற்றை அகற்றுவது, அதனால் உமக்கு அதனிடம் விருப்பமதிகம். முதலில் உணவுதானியப்பயிராக இருந்த அருகம்புல் துர்க்கையால் சபிக்கப்பெற்றுப் புல்லானாள். ஸித்தி-புத்தி தேவிகளை வழிபட்டு வெள்ளையும் பச்சையுமாக இருவகைகளில் உண்டானாள். மற்றதேவதைகளை வழிபடவும் உகந்ததெனினும் துர்க்கை வழிபாட்டில் தவிர்க்கத்தக்கதே. இரண்டிரண்டாக, ஒன்றாக, இருபத்தொருதடவையாக உம்மை வழிபட ஏற்றது. கருந்துளசி நீலாதேவி, விஷ்ணு மாயை, உம்மால் சபிக்கப்பெற்றது. மற்றதேவர் வழிபாட்டிற் கேற்ற தெனினும் உமது வழிபாட்டிற்கு ஏற்றதல்ல. வெள்ளெருக்கம்பூ, மந்தாரப்பூ, வன்னி இலை, இவற்றால் அர்ச்சனை செய்வதை விரும்பி ஏற்கிறீர். இவற்றில் உள்ள திருப்தி உமக்கு வேறு பொருளில் இல்லை எனலாம் *(183-191)*

ச்வேதார்க மூலமணிபிர் மந்தார ஶமீமயைஶ் ச மணிநிசயை: ।
க்ரதிதாம் கிலாக்ஷமாலாம் தாரயிதார: ப்ரஸாதபா த்ரம் தே ॥ 192

விஜய ப்ரவாள நகரீ பௌம மயூரேஶ நாஸிகாதீநாம் ।
க்ஷேத்ராணாம் யாத்ராயாமஶக்த மபி மாம் புநாது விக்நேஶ: ॥ 193

ந மம ஜ்ஞாநே நிஷ்ட்டா யோகே வா மந்த்ர கர்ம நாமாதௌ ।
த்வத் பாதாஶ்ரயணாந் மாம் உத்த்தர ஸம்ஸாரதஶ்ச ஸித்த்திபதே ॥ 194

நிர்வாணதீ க்ஷயாऽஹம் நஸம்ஸக்ருதோ நாபி யோகதீக்ஷாத்யை: ।
ஸாமாண்யதீக்ஷயாபி ச புநீஹி புத்த்தீஶ பாவநா லேஶாத் ॥ 195

மா மக்ருதஸுக்ருத ஸஞ்சயம் அநுபாஸித முக்க்யதேவதா மூர்திம் ।
கேவல பக்திபலான் மாம் க்ருதார்த்த் யேதா: க்ருபாபயோ ராஶே ॥ 196

காமதரங்காபிஹதம் கபீரஸம்ஸாரஸாகரே மக்நம் ।
விஷய க்ராஹக்ருஹீதம் பவாப்த்திபோதஸ்தவமேவ தாரயமாம் ॥ 197

இச்சாமாத்ராதணுமபி மேரும் குருஷேऽநலம் ச ஸலிலமிவ ।
மருமபி ஜலதிம் பவதோ மதகநிராஸே கணேஶ கோ பார: ॥ 198

ஆகஸ் மிகயஸி காமான் துரவாபாநபி விசித்ரயஸ்யர்த்தான் ।
ஸர்வ மகிஞ்சித்கரமபி உபேக்ஷஸே கிந்நவநுக்ரஹார் ஹம் மாம் ॥ 199

*வெள்ளெருக்கம் வேரின் மணிகளைக் கொண்ட மாலை, மந்தாரம், வன்னி இவற்றின் குச்சிகளாலான மாலை, இவற்றைத்தரித்தவர்கள் உமது அருளைப் பெறுகிறார்கள். விஜயநகரி, பிரவாளநகரி, மயூரேசம், நாஸிக் முதலிய க்ஷேத்திரங்களின் யாத்திரையில் சக்தியற்ற என்னை நீர் காப்பீர். எனக்கு ஜ்ஞான யோகத்திலோ யோகவழியிலோ, மந்திரங்களிலோ வழிபாட்டிலோ, நாமஜபத்திலோ ஈடுபாடில்லை, என்னை ஸம்ஸாரச் சூழலிலிருந்து காப்பாற்றுவீர். நிர்வாண தீக்ஷையோ யோகதீக்ஷையோ ஸாமான்ய தீக்ஷையோ கூடபெறாத என்னை உமது பாவனையால் தூயவனுக்குவீர். புண்யம் செய்யாதவன், தேவதா மூர்த்தியை வழிபடாதவன், எனினும் பக்தியைக் கருதி என்னைக் கடைத்தேற்றுவீர். கருணைக்கடலே! ஸம்ஸாரம் எனும் ஆழ்கடலில், காமமெனும் அலையால் இழுக்கப்பட்டு, பொருள் நாட்டமெனும் முதலையால் கவ்வப்பட்டு, மூழ்கிக் கொண்டிருப்பவனை ஓடமாக நின்று மீட்பீர். நீர் விரும்பினால் அணுவைமேருவாக, நெருப்பைத் தண்ணீராக, பாலைவனத்தைக்கடலாக, மாற்றுவீர்.*

என்பாபத்தைப் போக்குவதில் ஏது சுமை? ஆசைகளைத் திடீரெனத் தோன்றச் செய்கிறீர். கிடைத்தற்கரிய பொருளை மனத்திடம் விந்தைப்பொருளாகக் காட்டி ஏமாற்றுகிறீர். எல்லாமே பயனற்றவை. அருள்புரியத்தகுந்தவனுன என்னிடம் ஏன் இந்தப்பராமுகம்? (192-199)

யோ தேஶகாலவஸ்துபிரபரிச்சி ந்நோऽபி ஹ்ருத் குஹாவர்தீ।
ப்ரேயதி ஸர்வ ஜந்தூன் அநவரதம் தம் கணேஶ மர்ஹாமி ॥ 200

கால ஸ்வபாவ நியதிப்ரப்ப்ருதி ஜகத்பீஜ முத்கிரந்தே யே।
அவிதந்தஸ்தவ தத்வம் ஸம்ஸ்ருதி சக்ரே ப்ப்ரம்ந்தி முஹ்யந்த: ॥ 201

ஸம்ஸ்ருதி தர்மாஸங்கீ தத்ஸாக்ஷீ த்வம் ததாநுரூப்யேண।
உச்சாவசபல தாதுஸ்தவ வைஷம்யம் ந நாபிநைர்க்க் ருண்யம் ॥ 202

யமுபாஸேऽஸ்மிந் ஜன்மநி தேவம் யாவச்சரீரஹாநமஹம் ।
ப்ரேத்ய ப்ரதிபத்ஸ்யேऽஹம் ஜகச்ச ஸர்வம் ஸ்த்திதேரவஸ்த்தாயாம் ।
ப்ரளயாவஸ்த்தாயாம் த்வம் த்த்யாயேம் கம் கதம் த்வதந்யமஹம் ॥ 204

ஸுகது: க்கமோஹரூப ப்ரபஞ்ச ஜாலாங்குர ப்ரரோஹார்ஹம் ।
மூலாவித்யா பீஜம் தக்த்தும் நான்யத் விநா பவத் ஜ்ஞாநம் ॥ 205

தஜ்ஜ்ஞாநம் மேऽஸுலபம் யஜ்ஞதபோதாநஸாத நாபாவாத் ।
த்வத் பக்தி மாத்ர ஸாதநமதிதீநம் மாமநுக்ருஹாண விபோ ॥ 206

இடமோ காலமோ கட்டுப்படுத்த இயலாத நீர் இதய குகைக்குள் இருக்கிறீர். எல்லா உயிரினத்தையும் இடைவிடாது அதனதன் பணியைச் செய்யத் தூண்டுகிறீர். அந்த கணேசரை நான் ஆராதிக்கிறேன். காலம், இயல்பு, விதி, இயற்கை என்று உலகவாழ்க்கைக்குக்காரணம் காட்டுபவர்கள் உம் தத்துவ மறியாதவர். வழியறியாது திகைத்துச் சுற்றிச் சுற்றி வருகின்றனர். ஸம்ஸார இயல்புகளில் சிக்காமல், அவற்றிலிருந்து கொண்டே ஸாக்ஷியாகக் கண்டு, செயலுக்கேற்ற பலனைத்தருகிற உம்மிடம், சமநோக்கின்மையோ பரிவின் மையோ இல்லை. இப்பிறவியில் முடிவுவரை, உபாசிக்கிற தெய்வத்தின் நிலையை எண்ணத்திற்கேற்ற பலன் என்ற நியதிப்படி நான் காண்பேன். தோன்றுவதற்கு முன்னும் தோன்றிய நிலையிலும் மறைந்த பின்னரும் இவ்வுலகம் உம்மிடமே உள்ளது. அதை உணர்ந்த நான் எதனை நினைவிற்கொணர்வேன்? உம்மை உணர்ந்தாலன்றி

ஸுகமும் துக்கம் கலக்கமும் வடிவான எனது பிரபஞ்சவலைக்கான முளையான மூல அஜ்ஞானம் கருகாது. அந்த உணர்வு எனக்கு எளிதில் கிட்டாது. அதற்குரிய வேள்வியோ தவமோ மற்றசாதனமோ என்னிடமில்லை. உம்மிடம் பக்தி என்றொரு சாதனம் மட்டுமுள்ள எனக்கு அருள் புரிவீர் (200-206)

மாயா விலஸிதமேதத் ப்ரபஞ்ச ஜாலம் நவஸ்துத: கிஞ்சித் ।
நஹி ரஜ்ஜு ஶுக்திகாதி வ்யதிரேகேணாஸ்தி ஸர்பரஜதாதி: ॥ 207

கந்த்தர்வ நகரகல்பம் ஸர்வம் ஸ்வாப்நப்ரவ்ருத்திஸத்ருஶம் ச ।
மாயாமாத்ரம் மந்யே த்வத்வ்யதிரிக்தம் த்வதேகதாநோऽஹம் ॥ 208

அக்ராஹ்யோऽநிர்தேஶ்யோऽசிந்த்யோऽதர்க்யோऽப்ரமேயமஹிமா த்வம் ।
விக்ஷிப்த சித்தவ்ருத்தி: ப்ரபவேயமஹம் கதம் பவத்த்யாநே ॥ 209

ஶ்ருங்க க்ராஹியேத்ருஶ ஆத்மேத்யுக்கெதள ஶ்ருதிஸ்த்வநீஶாநா ।
சகிதா ப்ரதிபாதயதி ஹ்யத்யாரோபாபவாதரீத்யா த்வாம் ॥ 210

*இந்த உலகம் மாயையால் தோன்றுகிறது மாயைத்தோற்றம். உண்மை நிலை இதுவல்ல. மாயைத்தோற்றத்தில் கயிற்றைத் தவிர பாம்போ சிப்பியைத் தவிர வெள்ளியோ இல்லை. இது கந்தர்வநகரம், கனவுத்தோற்றம். மாயை அகன்றால் உம்மைத்தவிர வேறு ஒன்றுமில்லை. அதனால் உம்மையே நம்பியுள்ளேன். நானோ எண்ணச் சிதறலுள்ளவன். நிலைத்த எண்ண மில்லாதவன். நீரோ பொறிகளுக்கு அகப்படாதவர், இன்னதென்ற குறிப்பீடற்றவர், எண்ண முடியாதவர், ஆராய முடியாதவர், அளவிட முடியாதவர், எப்படி நான் உம்மை தியானிக்க இயலும்! ஆத்மா இன்ன தென்று கொம்பைப்பிடிப்பது போன்று சுட்டிக் காட்ட இயலாத வேதம் அத்யாரோப - அபவாதமுறையில் தான் பயந்து உம்மைக் காட்டுகிறது. (207-210)*

பூத பவத்பவ்யேஷு த்வத்வ்யதிரிக்த: கதாபிநாஸேऽஹம் ।
த்வத்ப்பாவாபத் திஸ்து ப்ப்ரமாபகமநாத் ஸதாத்வதாத்மாऽஹம் ॥ 211

த்வாமேவாஹம் ஜாநே த்வதந்யப்பாவ ப்ப்ரமாபகமநாய ।
த்வத்ப்பாவப்பாவிதோऽந்யம் ந போக்ய வர்கம் ச காமயே கமபி ॥ 212

லம்போதர ஹேரம்ப த்வைமாதுர தந்திவதந விக்க்நேஶ ।
அவ்யாஜதயாஸிந்த்தோ பக்தபராதீந தீந ஜநபந்த்தோ ॥ 213

பவதாநுக்ராஹ்யோऽஹம் ஸம்ஸ்ருதி பந்தா தஹம் ப்ரமுச்யேய ।
நால்பேந லோபநீயோ விஷயாநந்தம் ந சாபிநந்தேயம் ॥ 214

நஸ்வர்க ஸ்வாநந்தம் கார்யஸ்வாநந்தம ப்யஹம் நேஹே ।
ஆநந்தபவநமீயாம் தத்விந்தேயம் விதேஹகைவல்யம் ॥ 215

யத்யபி ஶுத்தாத்வைதீ பாஹ்யஸுபூஜநாதிநாபி ஶைவோऽஹம் ।
பரமாத்ம பாவித கணபதிபாவ: கதாऽபி மாபைது ॥ 216

முன்னும் பின்னும் இப்போதும் உம்மை விட்டகலாதவன். பிரமை நீங்கினால் உமது நிலை பெறலாம். என் ஆத்மாநீரே. உம்மைத் தவிர வேறொன்றாக நினைக்கிற பிரமை நீங்க உம்மை மட்டும் தெரிந்து கொள்வேன். உம்மையே நினைத்து நினைத்துவாழ்வேன். வேறு போகப்பொருளை நாடமாட்டேன். லம்போதரரே, ஹேரம்பரே, இரு அன்னைகளைக் கொண்டவரே! யானை முகத்தோரே, விக்நேசுவரரே! எதிர்பார்வையற்றுப் பரிவுகாட்டுபவரே! பக்தருக்கு வசமாகுபவரே! எளியவரின் உற்றாரே! உம் அருள் பெறத்தக்கவன் நான். எப்படி யாவது வாழ்க்கைக் கட்டிலிருந்து விடுபடவேண்டும். சிறுபொருளைக் காட்டி ஏமாற்றத்தக்கவனல்ல. பொருளால் பெறுவதும் செயற்கையானதும் ஸ்வர்கத்தில் பெறுவதுமான ஆனந்தத்தை நான் விரும்பவில்லை, ஆநந்த பவனத்தில் வசிப்பேன். விதேகமுக்தி பெறுவேன். இதுவே எனது லட்சியம். நான் சுத்தாத்வைதி தான். ஆனால் வெளிப்படையான பூஜை முறைகளால் சைவன். ஆனால் கணபதி தான் பரமாத்மா என்ற உணர்வு என்னை விட்ட கலாதிருக்கட்டும் (நீலகண்டருடையது)



# ॥ श्रीगणपतिस्तोत्रम् ॥

आस्ते घोरसमुद्रवासव दिशापारस्थलीगोपुरात्
बाह्ये वामकरार्थकाशविषयो माद्यन्महान् पिप्पलः ।
आस्थानं यदुपान्तधन्यधरणीमास्थाय देवः स्वयं
दन्तीन्द्राननविग्रहस्त्रिभुवनं पुष्णाति तैस्तैर्वरैः ॥ १ ॥

पुरःप्रसरदद्भुतं प्रथितदानतिम्यत्करं
विभोरभिनवात्मजं वटतरुस्थलावासिनः ।
मुहुः फलितपिप्पलद्रुमतटीनिरूढास्पदं
महागजमदाननं मणिनिधानमाराधये ॥ २ ॥

परिमलपरिणद्धैः कम्रनानाप्रसूनैः
अविरतमभिरामैरात्तभूषाविशेषम् ।
अपि च निचितलीलाकल्पशिल्पोपचारैः
उपचितमभिवन्दे दैवतं दन्तिवक्त्रम् ॥ ३ ॥

आलोकय महाश्चर्यं मूले पिप्पलशाखिनः ।
लीलाकल्पतरुः कोऽपि खेलामुखगजायते ॥ ४ ॥

निष्पतन्निबिडामृत द्रवपूरितेन्दु कलाङ्कितं
शिल्पभारधुराधुरन्धरचित्रभूषणभूषितम् ।
कल्पमानकृपाकटाक्षनिरीक्षिताखिलवैभवम्
पिप्पलद्रुमविद्रुमस्थलकल्पकद्रुममाद्रिये ॥ ५ ॥

वन्दे बहुलमाधुर्यकन्दलीललिताद्भुतम् ।
मन्देतरमहैश्वर्यमन्दिरं सिन्धुराननम् ॥ ६ ॥

मदजलविलुलितकटतटविलुठित-
मधुकरपरिकरमुखरितपरिमल ।
अभिमतवरभरवितरणपरिणत-
मदकलकरतल गजमुख जय जय ॥ ७ ॥

निरवधिमदधारानिर्झर भ्राम्यमाण-
भ्रमरसमरलीलाधोरणीदत्तदृष्टिः ।
अभिमतवरदानव्यग्रहस्तारविन्दः
करिकलभमुखो नः कामधेनुं धिनोति ॥ ८ ॥
कल्पितानल्पभूषेण वेषेण बहुलश्रियम् ।
कल्पशाखिनमालम्बे करीन्द्रकलभाननम् ॥ ९ ॥
कारणं किमपि जन्मभागिनां पूरणं पुलकिताद्भुतश्रियाम् ।
पारणं भुवनसर्वसम्पदां वारणेन्द्रवदनं भजे महः ॥ १० ॥
मदोत्कटकटाङ्गणभ्रमितमत्त भृङ्गाङ्गना-
कलध्वनितधोरणीकलकलोत्सवास्वादिने ।
नमस्त्रिदशमण्डलीमुकुटकोटिकोटीतट-
स्खलच्चरणपल्लवक्रमसहायधाम्ने नमः ॥ ११ ॥
मदपरिमलक्रीडाक्रोडीकृतभ्रमरच्छटा-
निबिडनिबिडश्रीमच्छुण्डातरङ्गिततताण्डवम् ।
त्रिदशपरिषत्सेवादिव्याञ्जलिक्रमरञ्जितं
द्विरदवदनं वेषं वन्दामहे भुवनश्रियः ॥ १२ ॥
विपल्लवान् वः पदपल्लवेन विधूनुतादानतकल्पशाखी ।
शिखामणिः शिल्पितसिन्धुरश्रीः श्वःश्रेयसानां च गणश्रियां च ॥
मदर्दुर्दिननिर्यदादरव्यसनारूढमधुव्रतप्रजाम् ।
शिवयोरपि लोचनाद्दृतां शिशिरां पश्यत विश्वतः श्रियम् ॥ १४ ॥
दृढाभमल्लीदलकुड्मलाग्रमालाभिरालिङ्गितनीलगात्रम् ।
विराजते धाम गजेन्द्रवक्त्रं नक्षत्रमालाभिरिवान्तरिक्षम् ॥ १५ ॥
मङ्गल्यदोहि मदसिन्धुमहाप्रवाहभङ्गीनिरर्गलपरिष्कृतपुष्कराग्रम् ।
तुङ्गानुभावमनुभावशतानुविद्धभृङ्गारभारसवताच्छिववैभवं वः ॥
आलोकयालोकय लोचनाभ्यामाभ्यामुभाभ्यामभिरामसीमम् ।
धामाङ्कुरं कुञ्जरराजवीथीसमुल्लसद्वक्त्रविचित्रभावम् ॥ १७ ॥

नमो नम्रजगज्जन्तुचिन्तामणिनखाङ्घ्रये।
मत्तहस्तीन्द्रवक्त्राय चित्राय महसे मुहुः ॥ १८ ॥

अविसरद्भ्रमरीनिकरोद्भटं कटतटे कमनीयमदोत्कटे।
गजमुखं गहनं भुवनश्रियामभिमतं भवतामभिवर्षतु ॥ १९ ॥

सर्वतः कुसुमसंप्लवधारानिर्वृतेन महसा निरवद्यम्।
गर्वहारि महसां गजवक्त्रं स्वर्वधूसततगीतमुपासे ॥ २० ॥

अविरलमदधार क्रीडाकडारमधुव्रत-
व्रज विलुलितव्यक्तामोदप्रमोदितदिङ्मुखम्।
हरिपुरवधूहस्तोद्भ्रान्तप्रसूनपरम्परा-
परिमलदिशे दत्तव्रीडं भजामि गजाननम् ॥ २१ ॥

सर्वगर्जितमदद्विपच्छटानिर्विवादगजराजसम्पदे।
निर्वृतिप्रियतमाय तेजसे सर्वलोकसुहृदे नमो नमः ॥ २२ ॥

नमस्त्रिलोकीतिलकाङ्कुराय कराग्रविन्यस्तसमस्तलक्ष्म्यै।
करीन्द्रवक्त्राय सुरेन्द्रमौलिमालावलीढप्रपदाय धाम्ने ॥ २३ ॥

सिन्धुरबन्धुरवदनं सीम श्यामाभिरामशिशिररुचाम्।
बन्धुरबन्धुजनानां बहुमुखमभिमुखमहो महो जयति ॥ २४ ॥

दिनकरकरपरिरम्भविजृम्भाविलसित शिल्पविकल्पम्।
समदृशि दृशि सुतरां अभिरामं मदगजमुखं अधिदैवमुदीयाम् ॥

त्वामेकमवलम्ब्यैव स्वाराज्यं गमिता वयम्।
मामेकमवलम्ब्यैव कारुण्यं गमितो भवान् ॥ २६ ॥

अविकलकृपापाङ्गक्रीडातरङ्गितदिङ्मुखं
मदगजमुखाकारं मन्देतरस्फुटवैभवम्।
भवतु निभृताशेषश्रेयश्श्रियां नियतास्पदं
त्रिभुवनदृशां दृसं भाग्याद्भुतं विजयाय वः ॥ २७ ॥

भ्रमद्भ्रमरमण्डलीकलकलारवाडम्बरस्फुरत्पुलकभूषणं श्रवणशूर्पदर्पोद्धतम्।
जगज्जयजयध्वनिध्वनितवैभवोज्जृम्भितं प्रियप्रसरनिर्भरं भज गजाननक्रीडितम् ॥ २८ ॥

आर्द्रचन्दनरसानुलिप्तयोराविभाति तव कुम्भयोर्द्वयम्।
भुक्तिमुक्तिसुधयेव निर्भरं पूर्णयोः क्षरणवेगशङ्कया॥ २९॥
मत्तहस्तिमुखमस्ति वस्तु वो वाञ्छितानि वितरीतुमुद्यतम्।
वाञ्छितं ललितकान्तिसम्पदां राशिना च मम मानसेन च॥
कामान् किरतु वः कामं धाम सामोद्भवाननम्।
रामणीयकसर्वस्वं सर्वस्वं सर्वसम्पदाम्॥ ३१॥
अयमस्मदीयसुकृताङ्कुरोद्गमो हरिदङ्गनाः शिशिरयन् दृशां श्रिया।
विजयत्स्वयं विजयसिन्धुराननो विजयश्रियं दिशति विश्वतोमुखीम्॥
शेषाभिरशेषाणामैश्वर्यविशेषबहुधाराणाम्।
धुरि रचितपट्टबन्धं दैवं दन्तीन्द्रमुखमिदं जीयात्॥ ३३॥
देव त्वदालोकनधन्यवृत्ति नेत्रद्वयं गात्रमिदं च मन्ये।
किञ्चान्यदावेदयते जनोऽयं कृतार्थतां केलिकटाक्षलक्ष्म्या॥ ३४॥
परिपूर्णमनोरथा वयं भवदालोकनकेलिसम्पदा।
किमिवापरमत्र कीर्त्यते करुणासागर गर्भकिङ्करैः॥ ३५॥
अथापि कथयामस्ते विस्तरेण गिरां विना।
भगवन् करुणापाङ्गैः पाहि पाहीति पाहि माम्॥ ३६॥

(श्रीकृष्णलीलाशुकमुनिविरचितं)

## ஸ்ரீ கணபதி ஸ்தோத்ரம்

ஆஸ்தே கோர ஸமுத்ரவாஸவதிஶாபார ஸ்த்தலீ கோபுராத்
பாஹ்யே வாமகரார்த்தகாஶ விஷயோ மாத்யன் மஹாந் பிப்பல:।
ஆஸ்த்தானம் யதுபாந்த தன்ய தரணீமாஸ்த்தாய தேவஸ் ஸ்வயம்
தந்தீந்த்ராநந விக்ரஹஸ் த்ரிபுவநம் புஷ்ணாதி தைஸ் தைர் வரை:॥ 1

புர:ப்ரஸரதத்ப்புதம் ப்ரதிததாந திம்யத்கரம்
விபோரபிநவாத்மஜம் வடதரஸ்த்தலாவாஸிந:।
முஹு: ப்பலித பிப்பலத்ருமதட நிரூடாஸ்பதம்
மஹாகஜ மதாநநம் மணிநிதாநமாராதயே॥ 2

பரிமள பரிணம்ரை: கம்ரநாநாப்ரஸூநை:
அவிரதமபிராமை: ஆத்தபூஷாவிஶேஷம்।

